# பறவையினங்கள்

சலங்கைக் காக்காய்




அநுத்தமா


வள்ளுவர் பண்ணை
137, பிராட்வே - சென்னை.1

# பறவையினங்கள்

## 1 சலங்கைக் காக்காய்

சீனு பள்ளிக்கூடத்திலிருந்து ஓட்டமும் நடையுமாக விரைந்து வந்தான். அவன் சட்டையின் பொத்தான் கழன்று, அவனது சிறு தொந்தி வெளியே தெரிந்தது. அவன் கொஞ்சம் பருமனைபடியால் வேகமாக நடந்து வந்ததில் அவனுக்கு மூச்சு வாங்கியது. கேட்டைத் தாண்டி வீட்டுத் தாழ்வாரத்தைஅடைந்தான் அவன். அப்பொழுதே தோளிலிருந்து புத்தகப் பையைக் கழற்றிவிட்டான். முன் அறையில் அடி எடுத்து வைத்ததுமே அந்தப் பை 'ஸ்புட்னிக்' போல் பறந்தது. அது மேசைமீது விழுந்ததை அவன் கண்ணுல்பார்க்கவில்லை.



காதால் கேட்டதோடு சரி! அவன் அவசர அவசரமாக உள்ளே நுழைந்தான். அவன் கண்கள் விரிந்து ஆவலே உருவாக இருந்தன.

"அம்மா, பூரி உருளைக்கிழங்கு செய்து இருக்கிறாயா? வாசனை வருகிறதே! எனக்கு எட்டுப் பூரி கொடுக்கவேண்டும்" என்று ஆர்ப்பாட்டமாகக் கூறியபடி ஒரு தட்டை எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தான் சீனு.

"செய்திருக்கிறேனே! உனக்குத் தராமல் யாருக்குத் தரப்போகிறேன்? கை கால் கழுவிக்கொண்டு வாயேன்" என்றாள் தாயார்.

"போ, அம்மா" என்று சிணுங்கினான் பிள்ளை.

"அவனுக்கு ஒன்றும் கொடுக்காதே. எருமை மாடாக ஆகிவிட்டான்" என்று அதட்டிக்கொண்டே அங்கு வந்தார் சீனுவின் அப்பா.

அப்பாவின் குரலைக் கேட்டதுமே சீனுவின் முகத்தில் இருந்த ஒளியெல்லாம் மங்கிவிட்டது, அவன் உற்சாகம் எல்லாம் இருக்கிற இடம் தெரியாமல் மறைந்துகொண்டது. பயந்தபடியே அவன் தகப்பனாரைப் பார்த்தான்.

"ஏனடா, பயலே! உன் பள்ளிக்கூடத்து 'மார்க்' குத்தாள் வந்திருக்கிறது. அதைக் காட்டாமல் உண்ண அமர்ந்து விட்டாயா?" என்று அதட்டினார் தந்தை. பிறகு சீனுவின் தாய்ப்பக்கம் திரும்பி, "தமிழிலே என்ன 'மார்க்கு' வாங்கியிருக்கிறான், தெரியுமா?" என்று இரைந்தார் அவர்.

"என்ன வாங்கியிருக்கிறான்?"

“ நூற்றுக்கு இரண்டு ‘மார்க்கு’. இந்த அழகுக்குப் பூரியாம், கிழங்காம்! வெளியே போடா கழுதை! இப்ப டிபனும் வேண்டாம்; ராத்திரி சாதமும் வேண்டாம்” என்று ஏகமாகக் கோபித்துக்கொண்டு விட்டு அவர் மகனைத் தரதரவென்று இழுத்துச் சென்று வாசல் பக்கம் விட்டுவிட்டார்.

தாயாருக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. அவன் படிக்காதது தவறுதான் என்று அறிந்தாள் அவள். ஆயினும், சீனுவுக்குப் பூரி உருளைக்கிழங்கு மசாலா என்றால் உயிர் என்பதும் தெரியும் அவளுக்கு. தகப்பனார் அவனைப் பத்து அடி அடித்து, எட்டுக் குட்டு குட்டி, இரண்டு உதை உதைத்திருந்தால் கூட அவன் தாங்கிக்கொண்டு விடுவான். சாப்பாட்டு விஷயத்தில் மட்டும் அவனால் சும்மா இருக்க முடியாது. வாய்க்கு ருசியானதை அவன் சாப்பிடாமல் இருக்கவே மாட்டான். அதை நிறுத்திவிட்டால் அவன் மனம் செத்துவிடும். ஆயினும், கணவன் கோபிக்கும்போது குறுக்கே போகக் கூடாது என்று பேசாமல் இருந்துவிட்டாள் தாயார்.

சீனுவின் அப்பா வெளியே கிளம்பிவிட்டார். போகும் முன் உள்ளே வந்து, “அந்தப் பயல் நான் திரும்பி வரும்வரை வாசலிலேயே கிடக்கட்டும். ஒன்றும் நீ கொடுத்துவிடக்கூடாது. ஆமாம்!” என்று விரட்டி விட்டுப் போனார். அவர் மிகவும் கோபக்காரர். ஆகையால், அந்த அம்மாளும் பேசாமல் இருந்துவிட்டாள்.

சீனு வாசல் தாழ்வாரத்தில் ஓர் ஓரத்தில் பேசாமல் உட்கார்ந்து இருந்தான். பகல் சாப்பிட வந்தபோது அம்மா உருளைக்கிழங்கு வேகப்போடு வதைப் பார்த்திருந்தான் அவன். அதனால் அவன் பள்ளிக்கூடத்தில் கடைசி வகுப்பு 'டிரில் மாஸ்ட'ரிடம் வயிற்றுவலி என்று சாக்குச் சொல்லிவிட்டு வீட்டிற்கு ஓடிவந்து விட்டான். வந்ததும் இப்படி நடந்து விட்டது. அவனுக்குப் பலவிதமாகத் துக்கம் துருத் துக்கொண்டு வந்தது. நல்ல வாசனையான, ருசி மிகுந்த பூரி கிழங்கு கிட்டாமல் போய்விட்டதே என்பது ஒன்று. அந்தச் சனியன் பிடித்த 'ரிப்போர்ட்' அப்பாவின் கண்ணில் படவேண்டுமா என்பது ஒன்று. அப்பா தான் கத்தினார் என்றால், அம்மாவும் பேசாமல் இருந்து விட்டாளே என்பது ஒன்று. அப்பா வெளியே போய், தெருக்கோடியில் அவர் தலை மறைந்த பிறகு அவனுக்குக் கொஞ்சம் நப்பாசைதான். உள்ளே போய் அம்மாளிடம் கேட்டு இரண்டு பூரி வாங்கி வந்து தின்றால் என்ன என்று அவனுக்குச் சபலம் தட்டியது. ஆயினும் அவன் எட்டிப் பார்த்தபோது அவன் அம்மா திரும்பிப்பாராமல் அடுப்படியில், என்னவோ செய்துகொண்டிருந்தாள்.

அப்பொழுதுதான் அவனுக்குக் கோபம் தலைக் கேறியது. அந்தச் சமயம் பார்த்து அடுத்த வீட்டு ரமணி சுவர்மீது ஏறி எட்டிப் பார்த்து, சீனுவை விளையாட அழைத்தான். அழகான மாம்பழம் ஒன்றைச் சப்பிக்கொண்டிருந்தான் ரமணி. சீனுவின் வயிற்றில் சங்கடம் செய்தது அந்தக் காட்சி. அப்பா

வரும்வரை தாழ்வாரத்தை விட்டு நகருவதற்கில்லை. அம்மாவும் முன்போல இல்லை. அப்பா வந்ததும் 'வத்தி' வைத்தாலும் வைத்துவிடுவாள். அதனால் அவனால் நகரவும் முடியவில்லை. உள்ளதை உள்ளபடி ரமணியிடம் சொல்லவும் பிடிக்கவில்லை. ஆதலால், தன் முகத்தைச் சுளுக்கிக்கொண்டு, வயிற்றைப் பிடித்துக்கொண்டு அவன் படுத்து விட்டான்.

"நான்தான் வயிற்றை வலிக்கிறது என்று பள்ளிக்கூடத்திலிருந்து வந்துவிட்டேனே. என்னால் விளையாட முடியாதுடா" என்றான் சீனு ரமணியிடம். அந்தப் பொய்யைச் சொல்வதற்குள் 'குபுகுபு' வென்று அவன் கண்ணில் நீர் வந்துவிட்டது. அதை மறைப்பதற்காக அவன் இரு கண்களையும் மூடிக் கொண்டு படுத்துக்கொண்டான். ரமணி ஓடிவிட்டான். அதன் பிறகும் சீனு கண்களைத் திறக்கவில்லை; கண்ணீரையும் துடைக்கவில்லை; கவிழ்ந்து படுத்துக் கொண்டு அழுது தீர்த்தான்.

"கா, கா, கா, கா" என்று காக்காயின் கரைதல் கேட்டு அவன் விழித்தான். சிறகு அடிப்பதையும் அதன் இரைச்சலையும் கேட்டு வெறுப்புக் கொண்டவனாக அவன் எழுந்து அதை ஓட்டினான். "கா, கா" என்ற சத்தத்துடன் 'கிணிங், கிணிங்' என்று ஒற்றைச் சலங்கை ஒலியும் கிளப்பியது அக்காகம். அதன் ஒரு காலில் யாரோ அதைக் கட்டிவிட்டிருந்தார்கள்.

"சூ! சூ! தலை வேதனையா செய்கிறாய்?" என்று ஆத்திரத்துடன் அவன் விரட்டினான்.



ஆனால், அந்தக் காக்காய் போகவேயில்லை. பிடிவாதமாக அவன் தலைப்பக்கமிருந்த சன்னலில் அமர்ந்து கத்திற்று.

"சொன்னால் தெரியவில்லை? கல் எடுத்துப்போடுகிறேன், பார்!" என்று ஒரு கல்லைப் பொறுக்கினான் சீனு.

"சீனு! என்னை ஏன் விரட்டுகிறாய்?" என்று கேட்டது அந்தக் காகம், ஒரு பக்கமாகத் தலை சாய்த்து.

"இது ஏதடா, பேசும் காக்காய்?" என்று அதி சயித்தான் சீனு.

"நான் உன் சிநேகிதன் ஆயிற்றே? என்னை விரட்டலாமா?" என்று கேட்டது காக்காய்.

"எனக்கு ஒருவரும் சிநேகமே கிடையாது" என்று வருத்தத்துடன் பேசினான் சீனு, அம்மாகூட கைவிட்டு விட்டாளே என்ற கவலையில்.

"உன் அம்மா, பார், உனக்காகச் சன்னலில் பூரியும் உருளைக்கிழங்கும் வைத்திருக்கிறார்கள். அதை எடுக்கத்தான் நான் வந்தேன்" என்றது காகம்.

சீனு அதன் பேச்சை நம்பாமல் சன்னலை எட்டிப் பார்த்தான். உண்மையில் அங்கே ஒரு தட்டில் பூரியும் ஒரு கிண்ணத்தில் மசாலாவும் வைக் கப்பட்டிருந்தன. "பாவம், அம்மா!" என்று அம் மாவின்மீது அனுதாபமாகத் தோன்றிவிட்டது சீனு வுக்கு. அதைத் தின்னவிடாமல் தடுக்கும் காகத்தின் மீது கோபமும் வந்தது அவனுக்கு.

"ஓய், காக்கா, உனக்கு என்ன திமிர்? என் பூரியை எடுத்து மொக்கினால் என்ன அர்த்தம் என்று கேட்கிறேன்!" என்று கேட்டான் அவன், கோபமாக.

காக்காய் சிரித்தது! "போடா, மண்டு. அம்மா வைத்துவிட்டுப் போனதே உனக்குத் தெரியவில்லை. நான் தெரிந்து கொண்டு தின்றால் தப்பா? நான் சொல்லாவிட்டால் உனக்குத் தெரியுமா?" என்று கேட்டது அது.

"ஆமா. நீ சொல்வதும் உண்மைதான். போனால் போகிறது. நீ எடுத்துக்கொண்டதை நீ தின்றுவிடு.

மீதியை நான் எடுத்துக் கொள்கிறேன்" என்ருன் சீனு, தாராளமாக.

"உன்னைப்போல யாருக்கும் கொடுக்காமல் தின்று விடுவேன் என்று நினைத்தாயோ!" என்று ஏளனமாகக் கேட்டது காகம்.

"உனக்கு யார் இருக்கிருர்கள் சொந்த மனிதர்கள்?" என்று கேட்டான் சீனு. உடனே நாக்கைக் கடித்துக் கொண்டான். காக்காயிடம் பேசும்போது 'சொந்த மனிதர்கள்' என்று சொல்வதும் சரியாகத் தோன்றவில்லை அவனுக்கு. 'சொந்தக் காக்காய்கள்' என்று எப்படிச் சொல்வது? விழித்தான் அவன்.

"எனக்கு உறவினர் நிறையப் பேர் இருக்கிருர்கள். பார்க்கிருயா?" என்று அழைத்தது காகம்.



"ஊம்" என்ருன் சீனு. ரமணியோடு விளையாடப் போக முடியவில்லை. காக்காயோடுதான் பேசுவோமே என்று தோன்றியது அவனுக்கு.

"வா, என்னேடு" என்று அந்தக் காக்காய் தன் இரு கால்களால் தத்தித் தத்தித் தாழ்வாரத்து ஒட்டு

வரை நடந்தது. பிறகு மெதுவாகப் பறந்து அருகே இருந்த அரசமரத்துப் பக்கம் சென்றது. அது செல்லும் இடமெல்லாம் சீனுவும் ஓடிச் சென்றான். அரச மரத்தின்மீது மெதுவாக ஏறினான். மரம் மூன்று விரல்களைப்போல அகன்று விரியும் இடத்தில் காக்காயின் கூடு இருந்தது.



"இதுதான் என் வீடு. இந்த மாதிரி மூன்று நான்கு கிளைகள் கூடுமிடத்தில்தான் நாங்கள் கூடு கட்டுவது வழக்கம்" என்று கூறிற்று காக்காய், பெருமையாக.

சீனு எட்டிப் பார்த்தான். அதிக ஆழமில்லாத இருப்புச் சட்டியைப்போல இருந்தது அந்தக் கூடு.

அதற்குக் குச்சிகள்தாம் சுவர். இன்னும் ஓரிரண்டு கூடுகள் இருந்தன மரத்தின்மீது. சில கச்சிதமாக, அழகாக அமைந்திருந்தன. சில என்னவோ தாறுமாறு கக் கிடந்தன. கூட்டின் உட்புறம் வைக்கோல், கம்பளி, நூல், பஞ்சு, துணிக்கந்தல், நார், மற்றும் மெத்தென்ற பலவித சாமான்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது.

"எப்படி இருக்கிறது என் வீடு?" என்று கேட்டது காகம்.

"ஓ, அழகாக, மெத்தென்று இருக்கிறதே! நீயாகவா கட்டினுய்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் சிறுவன்.

"ஆமாம், எங்களுக்கு யார் இஞ்சினியர், மேஸ்திரி, சிற்றுள் எல்லாம்? நாங்களே தாம். போன தடவை இரும்புக் கம்பியிலேயே கட்டியிருந்தேன். அதை நீ பார்த்திருந்தால் என்ன சொல்வாயோ!" என்றது காக்கை, செருக்குடன்.

"ஏது உனக்குக் கம்பி?"

"அங்கும் இங்கும் கிடைப்பதுதான்!"

சீனுவுக்கு உடனே வெட்கமாகி விட்டது. காக்காய் கடைக்குப்போய் காசு கொடுத்து வாங்குமா என்ன? தன் அசட்டுத்தனத்தைக் காகம் கவனித்து விடக்கூடாது என்று அவன் கூட்டையே உற்றுப் பார்த்தான்.

"என் குஞ்சுகளைப் பார்க்கிருயா? இன்னும் முட்டையாகத்தானே இருக்கின்றன? அடுத்த வாரம் வா. குஞ்சிகளைக் காட்டுகிறேன்" என்றது காகம்.

அப்பொழுதுதான் அந்தக் கூட்டில் நான்கைந்து முட்டைகள் இருப்பதைப் பார்த்தான் சீனு. முட்டைகள் நீண்ட கோளமாக இருக்கும்போது ஒரு பக்கம் கூர்மையாக இருப்பதுபோல இருந்தது. ஒரு பளபளப்பு கண்ணை வசீகரித்தது. எத்தனை நிறங்கள்!

"அழகாக இல்லை?" என்று கேட்டது காக்காய்.

"ஆமாம். வெகு அழகாக இருக்கின்றன. ஆனால், அவை குஞ்சுகளாகிவிட்டால் நன்றாக இராவே?" என்றான் சீனு.

"ஏனடா, அப்பா? என் குஞ்சுகளுக்கு என்ன குறைவு? அவை தங்கம்போல இருக்குமே?" என்று கோபித்துக் கொண்டுவிட்டது காகம்.

சீனுவுக்கும் வருத்தமாகி விட்டது. அதன் வீட்டுக்குப் போய்விட்டு அதன் குஞ்சுகளையே நிந்திக்கிறோமே என்று எண்ணி, தன் பேச்சுக்கு மிகவும் வெட்கினான் அவன்.

"கோபமா உனக்கு?"

"பின்னே என்னவாம்?"

"என்னை மன்னித்து விடு. தெரியாமல் சொல்லி விட்டேன். உனக்கும்தான் அழகுக்கு என்ன குறைச்சல்?" என்றான் சீனு, அதைச் சமாதான மூட்டும் பணியில் ஈடுபட்டவனாக.

காக்காய்க்கு உடனே களிப்பு உண்டாகிவிட்டது. அது தன் தலையைச் சாய்த்துச் சீனுவைக் காக்காய்ப் பார்வை பார்த்தது.

உண்மையாகவே காக்கையைக் கவனித்துப் பார்த்தோமானால் காக்கைக்கு மட்டும் அழகு இல்லையா? சுமார் ஒன்றரையடி இருக்கிறது அதன் நீளம்

—அதாவது, ஒரு நூலை எடுத்து அதன் மூக்கு நுனியிலிருந்து வால் நுனிவரை அளந்து பார்த்தோமானல் அவ்வளவு இருக்கும். சாம்பல் நிறத்தில் கழுத்துப் பட்டையும், மார்பும் கழுத்தும் இருக்க, கீழ்ப்பாகம் இன்னும் கருத்த நிறம். இறக்கைகளோ நல்ல கறுப்பு. பளபளப்பான அந்தக் கறுப்பு, சூரிய வெளிச்சத்தில் பச்சை, ஊதா, நீலம் என்று 'டால்' அடித்துக் கவரவில்லையா?

"நாங்கள் பெரிய வமிசமாக்கும்!" என்றது காகம், பெருமையாக.

"அப்படியா? உன் உறவினர்கள் வேறு ஊரில் கூட இருக்கிறார்களா?"

"ஓ! நம் பாரதநாடு முழுமையும் இருக்கிறார்கள். ஆனல், காஷ்மீரத்திலும், சிந்துபிரதேசத்திலும் இருப்பவர்க்கு மட்டும் எங்கள் அழகான கருமை கிடையாது. சிறிதே வெளுத்த ராசியாம். நாங்கள் அவர்களுடன் பழகுவதில்லை."

"ஏனே?"

"ஏன? நமக்கென்ன அங்கே வேலை? இங்கே எங்களுக்குப் போதுமானவர்கள் இருக்கிறார்கள்."

"உனக்குப் பிடித்தமான பண்டம் எது சொல்லேன். அம்மாவைக் கேட்டு வாங்கிக்கொண்டு வந்து தருகிறேன்" என்று சினு ஆசையோடு வினவினன். காக்கை நண்பனிடம் அவனுக்கு மிக்க விருப்பம் உண்டாகிவிட்டது.

காக்காய் பலமாகச் சிரிக்க ஆரம்பித்துவிட்டது. "எனக்கு நீ ஒன்றும் கொண்டு தரவேண்டாம். என்

மூக்கில் அகப்படமால் நீ காப்பாற்றி வைத்துக் கொண்டால் போதாதா!" என்று கேட்டது அது.

" நீ நாள்தோறும் என்ன சாப்பிடுவாய்?"

" அதை எதற்கு நீ கேட்கிறாய்? நான் சொன்னால் நீ அருவருப்புக் கொள்வாய். நான் எதை வேண்டுமானாலும் சாப்பிட்டு விடுவேன்" என்றது காகம்.

" உன்னிடம் எனக்கு அதுதான் பிடிப்பதில்லை. என் அம்மா தினமும் காலையில் சோறு சமைத்தவுடன் ஒரு கரண்டி உனக்குப் போட்டுக் கூவி அழைத்து விட்டுத்தானே எங்கள் யாவருக்கும் போடுகிறாள்? அதேபோல எத்தனை வீட்டில் சாப்பிடுகிறாய்? பின்னே ஏன் திருடவேண்டும்?" என்று கேட்டான் சீனு.

" இதற்குப் போய்க் கோபித்துக் கொண்டு விடுகிறாயே? உங்களோடு விளையாடுகிறோம் நாங்கள். மற்ற பறவைகளைப்போல நாங்கள் காட்டில் வாழ்கிறோமா? மனித இனம் எங்கிருக்கிறதோ அங்கேதான் நாங்கள் இருப்போம். மனிதன் அசந்து மறந்து இருக்கும்போது லாகவமாக வந்து, உஷாராக நின்று தட்டிப் பறித்துக் கொண்டு தப்பி ஓடுவதில் எங்களுக்கு ஓர் அலாதி இன்பம்."

காகம் எது சொன்னாலும் செய்தாலும் சீனுவுக்குச் சரி என்று தோன்றியது.

"நான் போகிறேன், அம்மா தேடுவாள்" என்றான் சீனு.

"வா, உன்னைக் கொண்டு விட்டுவிட்டு வருகிறேன்" என்றது காக்காய்.

சீனு மீண்டும் மெதுவாக இறங்கித் தாழ் வாரத்தில் தன் இடத்திற்கு வந்துவிட்டான். சற்றைக் கெல்லாம் அவன் தாய் அங்கு வந்து சேர்ந்தாள்.

"ஏனடா, சீனு. பூரி கொண்டு வைத்தால் அதைத் தொடவே இல்லை. அப்பா கோபித்தால் அதற்கு இவ்வளவு விறைப்பு எதற்கு? சாப்பிடக் கூடாதா? உன் நலத்துக்குத்தானே அப்பா சொல் கிறார். நாளைக்கே நிறைய மார்க்கு வாங்கேன். தாய் மொழியிலே போய் நூற்றுக்கு இரண்டு வாங்க லாமா?" என்று கடிந்துகொண்டாள் தாய்.

சீனு ஒன்றுமே சொல்லவில்லை. அவன் தாயைப் பார்த்து ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்பொழுது அந்தி மங்கும் வேளையாகி விட்டது. காக்கைக் கூட்டங்கள் அரசமரத்தைத் தேடிச் சென்றன. ஒரு சமயம் பெரிய மேக மண்டலம் போல ஒரு பெரிய கூட்டம் போகும். உடனே சிறிய கூட்டம் ஒன்று பறக்கும். அதன் பிறகு நான்கு, ஐந்து உல்லாசமாக வரும். மீண்டும் பெரிய கூட்டம். இப்படியே சிறிது நேரம் விடாத தொடராக காக்கைகள் பறந்து மரத்தை அடைந் தன. அத்தனையும் சேர்ந்து 'காச்சு மூச்'சென்று கத்தித் தீர்த்தன. சீனு தன் இரு கைகளால் காதுகளைப் பொத்திக் கொள்ளப் போனான். ஆனால், தன் நண்பனான காகத்தின் நினைவு வந்துவிட்டது. உடனே கைகளைக் கீழே போட்டுவிட்டுப் பேசாமல் இருந்தான். அதன் பிறகு அந்தப் பெரும் கூக்குரல் இன்ப கீதம்போல இருந்தது அவன் காதுகளுக்கு.

"டேய், என்னடா இருட்டும் சமயத்தில் மரத்துக் கிட்டே? உள்ளே வா?" என்ற அப்பாவின் குரல் கேட்டு வீட்டுப் பக்கம் ஓடி வந்துவிட்டான் சீனு. அத்தனை காக்கைகளும் எங்கு, எப்படித் தூங்கும் என்று பார்க்க அவனுக்கு ஆசையாக இருந்தது. ஆயினும் அப்பாவின் குரலைக் கேட்டு அவன் வீட்டிற்குள் வந்து விட்டான்.

அன்று பாடம் படித்து விட்டு இரவு சாப்பாடு முடிந்து அவன் படுக்கப் போய்விட்டான். அம்மா என்ன சோறு போட்டாள், என்ன சாப்பிட்டோம் என்றுகூட அவனுக்கு நினைவு இல்லை. அவன் மனமெல்லாம் காக்கையைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்தது. தூக்கம் வருவதற்கு அவன் கண்களை மூடிக்கொண்டு படுத்துக்கொண்டிருந்தான். அவன் உறங்கி விட்டதாக எண்ணின அவன் தந்தை அவன் பக்கத்தில் படுத்துக்கொண்டு அவனைத் தடவிக் கொடுத்தார். தன் தாயாருடன் அவர் பேசியதையும் அவன் கவனித்தான்.

"வெகு நேரம் அழுதானு?"

"இல்லை, இல்லை. பேசாமல் வாசல் தாழ்வாரத்தில் உட்கார்ந்து இருந்தான். நான் பேசின போதுகூடச் சிரித்தான்" என்று அம்மா பதில் அளித்தாள்.

"பாவம், குழந்தை என்று பார்த்தால் படிக்கவே மாட்டேன் என்கிறுனே? பிற பாடங்களில் தவறட்டும் தமிழில் போய்......"

சீனு உறங்கிவிட்டான். மேலே அவர்கள் என்ன பேசினார்கள் என்பதெல்லாம் அவனுக்கு ஒன்றும் தெரியாது.

அவன் கண் விழித்தபோது விடியற்காலம். அரச மரத்திலிருந்து காக்கைக் கூட்டங்கள் பேரிரைச்சலுடன் வெளிக்கிளம்பிக்கொண்டிருந்தன. சட்டென்று படுக்கையை விட்டு எழுந்த சீனு, சன்னல் கம்பிகளை பிடித்துக்கொண்டு அவைகளை வேடிக்கை பார்த்தான். ஒரேயடியாக எல்லாம் பறந்து ஓடிவிட்டன. முன் மாலைபோல கொஞ்சம் கொஞ்சமாகப் போக வில்லை. காலை வேளைப் பசி போலும். ஒரே மூச்சில் அரசமரம் 'காலி'யாகி விட்டது. சீனு எவ்வளவு துன்பப்பட்டும் அவனுடைய தோழனான சலங்கைக் காக்காய் அவனுக்குத் தென்படவில்லை. அவன் ஏமாற்றத்துடன் பின் பக்கம் போனான். அந்தக் காகம் தன்னைப் பார்த்து ஒரு பேச்சுப் பேசிவிட்டுத் தான் போகும் என்று எதிர்பார்த்திருந்தான் அவன். அது வராததும் அவன் இதயத்தில் ஓர் இடம் 'காலி' யாகக் கிடப்பது போல இருந்தது. அவன் மவுன மாகவே கொல்லைப்புறம் சென்று பல் துலக்கிவிட்டு அம்மாவிடம் வந்தான். அவள் அளித்த 'காபி'யைப் பேசாமல் வாங்கிக் குடித்து விட்டுப் போய்விட்டான். அவன் தன் பாடப்புத்தகங்களைத் தூக்கிக் கொண்டு தோட்டத்திற்குச் சென்று ஒரு 'சிமெண்டு பெஞ்சின்' மீது அமர்ந்துகொண்டான். "அப்பொழுது 'கிணீங்', 'கிணீங்' என்று ஓசை கேட்டது. உடனே ஆவலுடன் அவன் சுவர் ஓரமாக எட்டிப் பார்த்தான். சலங்கைக்

காக்காய் ஒரு வண்டி மாட்டின் முதுகில் உட்கார்ந்து அதைக் குத்திக்கொண்டிருந்தது. சீனுவுக்கு அதன் செய்கை துளிகூடப் பிடிக்கவில்லை.

"ஏய், காக்கா, ஏய் சலங்கைக் காக்கா! என்ன வரவர புத்தி கெட்டு விட்டது உனக்கு? அந்த மாட்டை எதற்குக் குத்தித் துன்புறுத்துறே? என்று மிக்க சினத்துடன் கேட்டான் அவன்.



"நான் ஒன்றும் அதைத்துன்பப் படுத்தவில்லை. பார், அதன் முதுகில் இருக்கிற உண்ணி, பூச்சி எல்லாம் எடுக்கிறேன்" என்றது காக்காய்.

"அதற்காகப் புண்ணில் குத்துகிறுயே? ஏர் பூட்டின ரணத்தின் மேலே குத்துவதா? மாடு எப்படிச் சுற்றிச் சுற்றி அவத்தைப் படுகிறது பார்" என்று கோபித்துக் கொண்டு காக்காயை ஓட்டினுன் சீனு. அது மாட்டின் முதுகிலிருந்து கிளம்பி வந்து அருகிலிருந்த சுவரில் அமர்ந்தது.

"என்னை மன்னித்து விடு, சீனு. நான் வேண்டுமென்று மாட்டைக் கொடுமைப்படுத்தவில்லை. உண்ணி எடுக்கப் போனேன். அதன் ரணத்தில் இருக்கும் புழுக்களைக் கொன்று தின்றேன். அதற்குள் புண் ஆறிவிடும். ஆனால் நான் மாமிசமோ, எதுவோ கிடைத்தால் தின்னும் வழக்கத்தில், குத்திக்கொண்டே இருந்து விட்டேன். மாட்டுக்கு வலிக்கும் என்று தெரிந்து கொள்ளவில்லை. என் ருசியையே நினைத்துக் கொண்டு இருந்து விட்டேன்" என்று கெஞ்சியது காகம்.



"போனால் போகிறது, போ. இனிமேல் அப்படிச் செய்யாதே. இங்கே வா. உன் கால்சலங்கையைக் கழற்றி விடுகிறேன். அதன் பளு தாங்காமல் நொண்டுகிறாயே?" என்றான் சீனு. காகம் அருகில் வந்தது. மெல்ல அதன் காலில் எந்தக் குறும்புக்கார பிள்ளைகளோ கட்டி விட்டிருந்த சலங்கையைக் கழற்றி விட்டான் சீனு. காக்கை அவனுக்கு நன்றி செலுத்தி விட்டு அவனைப் பார்த்தது.

“ஏய், இரேன். உங்களைப் பற்றி இன்னமும் சொல்லேன்” என்று கெஞ்சினான் சீனு.

“என்ன இருக்கிறது? நாங்கள் கூட்டமாகத் தான் இருப்போம், அதுவும் இரவு வேளைகளில் கும்பலாகப் பெரிய தோப்புகளையே வலியப் பற்றிக் கொண்டுவிடுவோம். மனிதர்கள் எங்கு இருக்கிறார்களோ அங்கே தான் இருப்போம். பாலைவனமாக இருக்கட்டும். நான்கு மனிதர்கள் போய், குடிசைகள் எழுப்பிவிட்டால் போதும். நாங்களும் போய்ச் சேர்ந்துவிடுவோம்.”

“உங்கள் இனத்தவர் வேறு நாடுகளில்கூட இருக்கிறார்களா?”

“ஏன், உங்கள் இனத்தினர் மட்டும் இல்லையா? எல்லா நாடுகளிலும் இருக்கிறார்கள் எங்கள் இனத்தவர். ஆனால் எங்களைவிட பெரிய அளவில் இருப்பார்களாம். யாரோ சொல்லக் கேட்டேன்.”

“காக்கா, நீ எவ்வளவு திறமையாளியாக இருக்கிறாய்? நான் வெறும் மக்கு. தமிழில்கூட ‘மார்க்கு’ குறைவாக வாங்கிவிட்டேன்” என்றான் சீனு.

“நான் பெரிய திறமையாளியா! நீ குயிலைப் பார்த்ததில்லையே. அதன் திறமை சொல்லுக்கு அடங்காது. அது என்ன செய்யும் தெரியுமா? பேசாமல் தன் முட்டையை என் கூண்டில் போட்டு விட்டு, பாட்டுப் பாடிக்கொண்டே ‘ஹாய்’யாக இருந்துவிடும். நான் குஞ்சு பொரித்து வளர்த்தால் வந்து சொந்தம் கொண்டாடும்.”

“நீ தெரிந்தும் ஏன் ஏமாறுகிறாய்?”

“நம்மால் முடிந்ததைச் செய்யலாமே என்பது தான். குயில்மீது கோபித்துக்கொண்டு அதன் குஞ்சுகளைப் பழி வாங்கலாமா? கிடக்கிறது போ. நான் எவ்வளவு விழிப்பாக இருந்தால்கூட அது என்னை ஏமாற்றி விடும்” என்றது காக்காய்.

“எவ்வளவு நல்ல காக்காயாக இருக்கிறாய்!” என்றுரைத்துக்கொண்டே சீனு அதைத் தழுவிக் கொண்டான்.

“நீ போ. பள்ளிக்கூடத்துக்கு நாழிகையாகி விட்டது. நானும் இரை தேடப் போகவேண்டும்” என்று அவனிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு பறந்து மறைந்தது காகம்.

சீனு அது வானத்தில் மறையும்வரை காத் திருந்து விட்டு உள்ளே போனான்.

தனது புதிய நண்பனை நினைத்து அவன் மிகவும் பெருமைப் பட்டான். குளித்துவிட்டுச் சாப்பிட வந்து அமர்ந்தான். என்றும்போல ஒன்றும் ஆர்ப் பாட்டம் செய்யாமல் போட்டதை உண்டுவிட்டு எழுந்து விட்டான். சாப்பிட்டு எஞ்சியவற்றை எடுத் துக் காகத்திற்காக ஓரிடத்தில் குவித்து விட்டு, தட்டை அலம்பிக்கொண்டு வந்து விட்டான்.

பள்ளிகூடத்திற்கு உற்சாகமாக ஓடினான் சீனு. அன்று அவன் வகுப்பில் பேச்சுப் போட்டி இருந்தது.

"நமது நண்பர்கள்' என்பதைப் பற்றிச் சொற்பொழிவு நடைபெற்றது.

"எத்தித் திருடும் அந்தக் காக்காய். அதற்கு இரக்கப்பட வேண்டும், பாப்பா" என்ற ஒரு வரியைக் கம்பீரமாகச் சொல்லிவிட்டுப் பேச ஆரம்பித்தான் சீனு.

"காக்கை திருடும்; கொத்தும்; கண்டதையும் தின்னும். ஆனால், அதன் பளபளப்பான, வழவழப்பான உடலின் அழகும், அதன் திறமையும் யாரைத்தான் கவராது?" என்று ஆரம்பித்தான் சீனு. உற்சாகத்துடன் அவன் பத்து நிமிடம் பேசித்தள்ளி விட்டான். எல்லோரும் கைதட்டினர். ஆசிரியர் அவனை மெச்சிப் பேசினார்.

"சீனுவைப் பாருங்கள். காகத்தைப் பற்றித்தான் பேசினான். ஆனால், எவ்வளவு நுட்பமாக அதன் வாழ்க்கையை ஆராய்ந்திருக்கிறான்! இப்படித்தான் பேச வேண்டும். இன்று அவனுக்கு இந்தப் பாரதியார் கவிதைப் புத்தகத்தைப் பரிசாக அளிக்கிறேன்" என்றார் அவர்.



சீனு ஒன்றும் புரியாமல் அதைப் பெற்றுக் கொண்டு கை குவித்தான். 'காக்காயைப் பார்த்துச்

சொல்ல வேண்டும்!' என்று எண்ணிக்கொண்டே வீடு வந்தான் அவன்.

அவன் பெற்ருேர் அவன் சொன்ன சேதியையும், காட்டிய பரிசுப் புத்தகத்தையும் பார்த்து மிகவும் மகிழ்ச்சிகொண்டனர்.

"நம்ப பையனை ஒருநாள் பட்டினி போட்டு வாசலில் தள்ளினுல் படிப்பு நன்ருகத்தான் வருகிறது" என்ருர் அப்பா.

"ஆமாம், அப்பா" என்ருன் சீனுவும். பட்டினியோடு வாசலில் கிடக்காவிட்டால் காக்காய் வரவும் போவதில்லை; அதனுடன் பேசவும் போவதில்லை. பரிசும் வந்திருக்காதன்ருே?

ஆனுல், அவன் அப்பாவுக்கு அது ஒன்றும் தெரியாதே? அவர் ஏதும் புரியாமல் சீனுவையே ஆச்சரியத்துடன் பார்த்தார்.

அவன் தன் கையிலிருந்த ஒற்றைச் சலங்கைகையே பார்த்துக்கொண்டிருந்தான்.



சீனு தன் பரிசுப் புத்தகத்தைப் பிரித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். பரிசு வாங்கினது முதல் அவனுக்குப் படிப்பில் மிகவும் ஆசை விழுந்து விட்டது. 'ஒரு முறை பரிசு வாங்கிவிட்டுப் பிறகு வகுப்பில் தோல்வியுறலாமா?' என்று ரோசம் பிறந்து விட்டது. அதனால் நன்ருகப் படித்தான் அவன்.

சாயுங்கால வேளைகளில் விளையாடிவிட்டு வந்ததும் அவன் தனக்குப் பரிசாகக் கிடைத்த பாரதி



யாரின் கவிதைகளைப் புரட்டிப் பார்ப்பான். சில புரியும்; சில புரியாது. அப்படியே பக்கங்களைத்

தள்ளியபோது 'குயில் பாட்டு' என்பது அவன கண்ணில் பட்டது. உடனே அவனுக்குச் சலங்கைக் காக்காய் சொன்ன சேதி நினைவிற்கு வந்தது. ஒரு குயிலைப் பார்க்கவேண்டும் என்று நினைத்தவன் அவன்; அப்பொழுது அவன் பக்கத்தில் பறந்து வந்தது அவனுடைய தோழக் காகம்.

"என்ன, சீனு, நலமா?" என்று கேட்டது அது.

"உன்னைப் பற்றித்தான் நினைத்துக்கொண்டிருந்தேன்" என்றான் சீனு.

"என்னோடு வருகிறாயா? குயில் காட்டுகிறேன். நான் அத்துடன் பேசுவதில்லை. நீயே போய்ப் பேசிப் பார்" என்றது காகம்.

சீனு உற்சாகமாகக் கிளம்பிவிட்டான். காகம் அவனை அரச மரத்தடிவரை கூட்டிக்கொண்டு போய் விட்டுப் பறந்துவிட்டது. சீனு குயிலை எதிர்நோக்கி ஆவலுடன் நின்றான். அப்பொழுதுதான் அது அவனைத் தாண்டிக் காகத்தினுடைய கூட்டின் பக்கமாகப் பறந்துகொண்டு இருந்தது.

"குயிலே, குயிலே! எங்கே, காக்கையின் வீட்டுக்குப் போகிறாயா?" என்று கேட்டான் சீனு.

"நீ யாரப்பா சிறுவன்?" என்று கேட்டது குயில்.

இசை பாடுவதுபோல நயம் மிகுந்திருந்த அந்தக் குரல் சீனுவின் கருத்தைக் கவர்ந்தது. "நான் சீனு. சலங்கைக் காக்காயின் நண்பன்" என்று சொல்ல

நினைத்தான் அவன். ஆயினும் காக்காயும் குயிலும் நிறத்தில் ஒத்திருந்தாலும் மனம் ஒவ்வாதவர்கள் என்று ஒருவாறு புரிந்திருந்தபடியாலே அதைச் சொல்லாமல், "எனக்கு உன் குரல் மிகவும் பிடிக்கிறது. பேசும்போதே இவ்வளவு இனிமை எங்கிருந்து வந்தது?" என்று கேட்டான் அவன்.

அதைக் கேட்டதும் குயிலுக்குக் 'குஷி' பிறந்து விட்டது போலும்! "கூயில், கூயில்" என்று அது இசைபாடிற்று. சீனு தைரியம் கொண்டு அதன் அருகில் சென்று மரத்தின்மீது ஏறினான்.

"வா, பையா, வா. காக்கா வீட்டுக்கு ஏன் போகிறேன் என்று கேட்கிறாயா? இதோ பார். அதன் கூட்டில் நான் இரண்டு முட்டை இட்டிருக்கிறேன். அவை எப்படி இருக்கின்றன என்று பார்க்கப் போகிறேன். நீயும் வாயேன்" என்று அழைத்தது குயில்.



சீனு எட்டிப் பார்த்தான். முன்பு ஒருநாள் முட்டைகளைப் பார்த்த இடத்தில் இப்போது சிறு சிறு குஞ்சுகள் இருந்தன; அவற்றின் உடல் சிறிதானாலும் வாய் பெரிதாக இருந்தது.

"உன் குஞ்சு, உன் முட்டை என்று எப்படித் தெரியும்?" என்று கேட்டான் சீனு வியப்புடன்.

" காக்கையின் முட்டையைவிட என் முட்டைகள் சின்னவை. குஞ்சுகளும் காகங்களைப்போலக் கறுப்பாக இருந்தாலும் சின்னவை. அதிலும் ஒரு வேடிக்கை."

சீனு குயிலைப் பார்த்தான்.

"வா, இறங்கி வந்துவிடு. நாம் வேறு இடத்திற்குப் போய் விடுவோம்" என்று அவனை அழைத்துவிட்டு, அந்த இடத்தை விட்டு குயில் அப்பால் பறந்து சென்றுவிட்டது. சீனுவும் மரத்தைவிட்டு இறங்கி அதன் பின்னால் சென்றான். குயில் பக்கத்து வீட்டின் மாந்தோப்பிற்குள் சென்றுவிட்டது. சீனுவுக்கு அதன் பின்னால் சென்று பேசவேண்டும் என்று மிகவும் ஆசையாக இருந்தது. ஆயினும் பக்கத்து வீட்டுக்கு எப்படி வேலியில் நுழைந்து போவது? அப்பா திட்டுவாரோ, அடுத்த வீட்டுத் தோட்டக்காரன் விரட்டுவானோ என்று யோசித்துக்கொண்டே அவன் முள்வேலிப் பக்கமாக ஆவலும் ஏமாற்றமுமாக நின்றான். குயில் அதைக் கவனித்து அவனைத் தேடிக் கொண்டு விரைந்து வந்தது.

"ஏன் நின்றுவிட்டாய்?" என்று கேட்டது அது.

" ஆகாயத்தில் பறந்து நீ போய்விட்டாய், நான் எப்படி வரமுடியும்?"

"வந்தால் என்னவாம்? நீங்கள் மனிதர்களே அதிசயமாத்தான் இருக்கிறீர்கள். நான் முட்டைகளைக் காக்காய்க் கூட்டில் போட்டு விடுகிறேன். என் முட்டைகளுக்கு இடம் வேண்டும் என்பதற்காக

அதன் முட்டைகளில் ஒன்று இரண்டை நாசமாக்கி விடுவேன். இதனால் எல்லாம் என்ன வந்துவிடும்? நானே குஞ்சு பொரித்து, கூடு கட்டி அவத்தைப் பட்டுக் கொண்டிருந்தால் ஆனந்தமாகப் பாடுவது எப்படி?''

"நீ செய்வது அநியாயம்தான். பாவம், காக்காய் பெரிய மனமுடையது. இல்லாவிட்டால் உன் குஞ்சுகளைக் கழுகுக்கும் நரிக்கும் இரையாகப் போட்டு விட்டிருக்கும்.''

குயில் சிரித்தது.

"அப்படி ஒன்றும் தயாள குணம் படைத்துவிடவில்லை உன் காகம். நூறு காக்காய்களாய் வந்து என் ஒருவனை அடிக்க வரும். நான் அவர்கள் பிடியில் சிக்காமல் ஓடி ஓடி அவர்களைத் திரிய வைப்பேன். அப்பொழுது மரத்தில், கூட்டின் அருகில் யாரும் இருக்கமாட்டார்கள். என் மனைவி பேசாமல் தன் குஞ்சுகளை அங்கு இட்டுவிடுவாள். இனி ஒன்று. காக்காய்க்குக் கணக்கு வராது. மூன்றுக்கு மேலே எண்ணத் தெரியாது. சில சமயம் காக்கை முட்டைகளே நான்கு ஐந்து இருப்பதும் உண்டு. சரி, தன்னுடையது என்று நினைத்து என் குஞ்சைக் காப்பாற்றும்.''

குயில் மீண்டும் சிரித்தது.

"சிரிக்காதே. தப்பையும் செய்துவிட்டு சிரிக்கவும் சிரிப்பார்களா? அவமானப் படவேண்டாமா?'' என்றான் சீனு ஆவேசத்துடன்.

"சரி, நீ இப்படியே நீதி நூல் படித்துக்கொண்டிரு. நான் போகிறேன்" என்று கூறிவிட்டுக் கிளம்பியது குயில்.

சீனு உடனே தன் முகத்தைத் தெளிய வைத்துக் கொண்டான். "போகட்டும் போ. அது உன் தொல்லை. நான் இப்பொழுது அங்கேவர முடியாது. என் அப்பா அடித்துக் கொன்றுவிடுவார். நீ இங்கு வந்து உன் வீடு, மனைவி, உற்றார், உறவினர் பற்றியெல்லாம் சொல்லேன். கேட்கிறேன்" என்று குழைவாக அழைத்தான் அவன்.

குயில் மறுபடியும் தன் குரலில் சுருதி கூட்டி ஆலாபனை செய்வதுபோலக் கோடி காட்டியது. அதன் பிறகு தழைந்திருந்த ஒரு மரக்கிளையில் அமர்ந்து கொண்டது. அதன் குரலைப்போலவே வேறு ஒரு குரல் கேட்டது. சீனு ஓசைவந்த திக்கை நோக்கினான். அங்கே குயிலைப் போலவே வேறு நிறத்தில் ஒரு பறவை வந்து குயிலின் அருகில் உட்கார்ந்து கொண்டது.

"இதுதான் என் மனைவி. அவள் அழகாக இருக்கிறாள் அல்லவா?" என்று பெருமையாகக் கேட்டது திருவாளர் குயில்.

தொண்டையில் தண்ணீர் வைத்துக் கொப்புளித்ததுபோல ஒரு சத்தம் செய்தது திருமதி குயில். பிறகு ஒய்யாரமாகத் தன் கணவனைப் பார்த்துவிட்டுச் சீனுவிடம் பேசியது.

"இவர் அழகு எனக்கு வருமா? 'கறுப்பே அழகு; காந்தலே ருசி' என்று மனிதர்கள் பேசிக்கொள்வார்கள் அல்லவா?" என்று கேட்டது அது.

அதன் சாமர்த்தியப் பேச்சைக் கேட்டதும் சீனுவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"நீங்கள் இரண்டு பேருமே அழகுதான்" என்ருன் அவன். உண்மையாகவே சீனு பார்க்கையில் அவை இரண்டுமே அழகாகத்தான் காட்சி அளித்தன.



ஆண் குயில் நல்ல கறுப்பு; ஒரே கறுப்பு. பெண் குயிலோ பழுப்பு நிறமாக இருந்தது. பழுப்பு உடலில் வெள்ளைப் புட்டாக்களும் வரிகளுமாக இருந்தன. உற்றுப் பார்த்தால் அழகாகவே இல்லை. இருந்தாலும் சீனு பேசாமல் இருந்தான். "நீங்கள் பாரத நாடு முழுவதும் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"ஓ! பாரத நாடு, ஈழ நாடு பூராவும் எங்கள் உறவினர்கள் இருக்கிருர்களே? இமயத்தில்தான் இல்லை. இந்தப் பக்கம் கிழக்கே சீனுவரைகூட எங்கள் சம்பந்தப்பட்டவர்கள் இருக்கிருர்கள்" என்று பெருமை அடித்துக்கொண்டது குயில்.

"நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்?" என்று கேட்டான் சீனு.

"நாங்கள் சின்ன சின்ன பழவகைகள்தாம் உண்போம். ஆல மரம், அரச மரம் இதில்தான்

நாங்கள் இருப்பது. சில சமயம் வேறு தோட்டங்களிலும் இருப்போம். ஆனால், பெரிய மரங்களில் இருந்தோமானால் மறைவிடமாகவும் இருக்கிறது; ஆல, அரசப் பழங்களும் ஆகாரமாகின்றன" என்றது திருமதி.

சீனுவுக்குப் பெண் குயிலைத்தான் மிகவும் பிடித்தது. "நல்ல ஆசிரம வாழ்க்கை. குடும்பப் பிக்கல் இல்லாமல் பழங்களை உண்டு, சோலைகளில் கீதம் பாடிக் காலம் தள்ளுகிறீர்கள்" என்றான் சீனு.

"நாங்கள் மாமிசம் சாப்பிடுவதில்லைதான். ஆனால், சில சமயம் நத்தைகள் தின்பதுதான்" என்றது ஆண் குயில்.

"ஆமாம், நீங்கள் எங்கள் அம்மா புடைவை கட்டியிருப்பதுபோல, நிறம் மாறியிருக்கிறீர்களே? உங்கள் பெண் குஞ்சுகளைக் காக்கை அறிந்தால் கொன்று விடாதா?' என்று கவலையுடன் கேட்டான் சீனு. கேட்கும்போதே அவனுக்கு அவமானமாக இருந்தது. தன் நண்பன் சலங்கைக் காக்காவைக் காட்டிக் கொடுப்பது போலவும், பழிப்பது போலவும் தோன்றியது. ஐயத்தைத் தெளிவாக்கிக்கொள்ளவும் ஆவல் இருந்தது. என்ன செய்வது?

பெண் குயில் தன் சாமர்த்தியத்தை நினைத்து ஒரு முறை 'கொப்புளித்து'க் கொண்டது. பிறகுதான் சீனுவுக்குப் பதில் கூறியது. "அது தெரியாதா உனக்கு? என் பிள்ளை கறுப்பாக இருப்பான், அவன் அப்பாவைப் போலவே. ஆனால், என் பெண் இருக்கிறாளே அவள் அப்பாவைக்கூட மிஞ்சும் கருமை

கொண்டு விடுவாள். வயதானதும் என்னைப்போல நிறம் வந்துவிடும்'' என்றது அது.

'காக்காயை ஏமாற்ற இதுவும் ஒரு வழியா!'' என்று நினைத்தான் சீனு.

அவன் பேசாமல் இருப்பதைப் பார்த்துத் தானே பேச்சுக் கொடுத்தது திருமதி. "என் முட்டைகளை நீ பார்த்ததில்லையே? காக்காய் முட்டையைவிட சின்னதாக இருக்கும். அவ்வளவு பளபளப்பு கிடையாது. நிறைய கலர் இருக்கும். மண் நிறம், பாசி நிறம்... அதிலும் புள்ளி, குத்து, கீற்று என்று பழுப்பு மங்கிய உதாவில் போட்டிருக்கும். அழகாக இருக்கும்'' என்றது.

"நீங்கள் எப்பொழுது முட்டை இடுவது வழக்கம்?'' என்று கேட்டான் சீனு. சமயம் தெரிந்தால் காக்காயை எச்சரித்து விடலாம் என்பது அவன் எண்ணம்.

குயிலா ஏமாறும்! அது பெரிதாகச் சிரித்தது. "காக்காய் எப்பொழுது குஞ்சு பொரிக்குமோ சமயம் பார்த்துச் செய்வோம்'' என்றது!

இதன் நடுவில் ஆண் குயில் போய்விட்டதைச் சீனு கவனிக்கவில்லை. தூரத்திலிருந்து 'ஹோ...யோ' என்று வேறு மாதிரி குரல் கேட்டது.

"என் கணவர் கூப்பிடுகிறார். நான் வருகிறேன்'' என்றது திருமதி குயில்.

சீனு திரும்பிப் பார்ப்பதற்குள் அது எங்கே பறந்ததோ?



சீனு அந்தச் சாமர்த்திய தம்பதிகளைப்பற்றி நினைத்துக் கொண்டே வீட்டின் பக்க மாக நடந்தான்.

“சீனு, ரேடியோ வையடா” என்று அவன் அம்மா உள்ளே இருந்து குரல் கொடுத்தாள்.

“சரி, அம்மா” என்று கூறி விட்டு சீனு ‘ஹாலில்’ இருந்த ரேடியோவைத் திருப்பினான்.

“இப்பொழுது கோகில வாணி மதுரம்மா பாடுவார் கள்” என்றது ரேடியோ. கோகிலம் என்பதே குயில் என்பது சீனுவுக்குத் தெரியும்.

“கோகிலவாணி மதுரமாகத்தான் இருக்கும்” என்றான் சீனு, குயிலின் குரலினிமையை நினைத்தபடி

சீனு பள்ளிக்கூடத்திலிருந்து வீடு திரும்பிய போது வாசலில் வண்டி ஒன்று நின்றுகொண்டிருந்தது. அவன் தன் புத்தகங்களை மேஜைமீது வைத்து விட்டுப் பின்புறம் போனான், கை கால் கழுவ,

'யார் வந்திருக்கிறார்கள், தெரியவில்லையே? அம்மா என்ன 'டிபன்' செய்து வைத்திருக்கிறாளோ, ஒன்றும் வாசனை தெரியவில்லையே' என்று தனக்குள் நினைத்தபடியே அவன் முகம், கை, கால் கழுவிக் கொண்டு துண்டினால் துடைத்துக் கொண்டே சமையலறையை எட்டிப் பார்த்தான். வாசல் பக்கம் இருந்த வண்டியும் போய்விட்டது. சமையலறையில் அமர்ந்து கொண்டு மைசூர்ப் போண்டாவை ருசி பார்த்தபடியே அவன் சின்ன மாமா பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் இருந்தார். சீனு அருகில் போய் நின்றதும் வழக்கம்போல அவனைக் கட்டித் தழுவி, கேள்வி கேட்காமல் மாமா தன் பேச்சிலேயே லயித்திருந்தார்.

"குயில் பாட்டு, மயில் அழகு, கிள்ளைமொழி காரியத்தில் குருவி...என்ன அக்கா, எப்படி வர்ணனை! நேரே போய்ப் பார்க்கும்போது எப்படி இருக்குமோ?"

"வெறுமனே குற்றம் கண்டு பிடிக்காதே. சட்டுப் புட்டென்று ஒத்துக்கொள்" என்றாள் அம்மா.

சீனுவுக்கு ஒன்றும் புரியவில்லை. மேலும் அவன் வருகையை மாமாவும் பொருட்படுத்தவில்லை, அம்மாவும் கவனிக்கவில்லையே என்று அவனுக்கு வருத்தமாக இருந்தது. அதனால் குரல் கொடுத்து அவர்கள் பார்வையைக் கவர எண்ணினான் அவன்.

"யார் அம்மா குயில் குரல், மயில் அழகு?" என்று கேட்டான் சீனு.

"உனக்கு வரப்போகும் மாமியடா, பயலே" என்று விளக்கினார் மாமா, உற்சாகத்துடன்.

"அப்படியானால் அழகுதான் மாமா. குயில் குரல், ரம்மியமாக இருக்கிறது" என்றான் சீனு. தனக்கு அவ்விஷயம் தெரியும் என்பதை உறுதிப் படுத்திக்கொண்டு.

"அது சரிதானடா. மயில் குரலும் குயில் அழகும் வந்துவிட்டால்...?" என்று கேட்டுவிட்டு 'ஓ' வென்று சிரித்துச் சீனுவை அருகில் இழுத்துக்கொண்டார் மாமா.

சீனுவும் பிரமாதமாகச் சிரித்தான்.

"சிரிக்க வேண்டாம். அப்படி எல்லாம் ஒன்றும் நேராது. சீனு, மாமாவை அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் போய் விட்டுவா" என்று கட்டளையிட்டாள் தாயார்.

"எனக்குப் போண்டா?" என்று கேட்டான் சீனு.

"இதோ கொடுக்கிறேனே — தின்று விட்டுக் கிளம்பு" என்றாள் தாயார்.

மாமாவுடன் வெளியே போவது என்றால் சீனுவுக்கு மிக்க உற்சாகம்தான். ஆனாலும் அவனால் அதற்காகப் போண்டாவைத் தியாகம் செய்யமுடியவில்லை. பலகாரம் முடிந்ததும் மாமாவின் கையைப் பிடித்துக்கொண்டு கோவிலை நோக்கி நடந்தான் சீனு. வழியில் தள்ளுவண்டியில் பட்டாணிக் கடலை விற்பவன் வந்தான்.

"மாமா, ஒரு காலணாவுக்குப் பொரி வாங்கித் தாருங்களேன்?"—கெஞ்சினான் சீனு.

"போடா பொரி என்ன பஞ்சத்தனம்? ஐஸ்கிரீம் வாங்கித் தருகிறேன், பொறு" என்றார் மாமா.

"இல்லை, மாமா. நான் தின்பதற்கு இல்லை. கோயில் மயிலுக்குப் போட்டு அதன் இறகு ஒன்று எடுத்துக் கொண்டு வருவேன்."

சீனு பொரியுடன் கோயிலுக்குப் போனான். பிள்ளையார், அம்மன், சாமி ஒவ்வொரு சந்நிதியிலும் அர்ச்சனை செய்துகொண்டு, நிதானமாகத் தொழுது விட்டு வந்தார் மாமா. சீனுவின் மனமெல்லாம் முருகன் சந்நிதியில் இருந்தது. அங்கேதான் இரண்டு மயில்கள் இருந்தன. பொரி போட்டவுடன் எடுக்க வரும். அப்பொழுது ஒரு கை தண்ணீர் தெளித்தால் உடனே தோகை விரித்து ஆடும். அப்பொழுது சில சமயம் இறகு ஒன்று விழும். இதைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தான் சீனு. அப்பாவுடன்தான் கோவிலுக்கு வருவது வழக்கமாதலால் இந்த மாதிரி பரிசோதனை

செய்ய வசதி இருந்ததில்லை. இன்றுதான் செய்ய வேண்டும் என்று பறந்தான் அவன்.

அவர்கள் முருகன் சந்நிதிக்குப் போனபோது மயில் தானாகவே தோகை விரித்து ஆடிக்கொண்டு இருந்தது. சீனு பொரியை மறந்து அப்படியே லயித்து நின்றான். சின்ன கைப்பிடிச் சுவர் ஒன்றன்



மீது அது தன் முழு விசிறித் தோகையையும் பிரித்து விட்டுவிட்டு அழகு நடைபயின்று கொண்டிருந்தது. அதன் அருகில் ஒரு பெண் மயில் கீழே விழுந்திருந்த தானிய வகை எதையோ கொரித்துக்கொண் டிருந்தது.

“மாமா, இந்த மயிலும் ஆடினால் நன்றாக இருக்கும் அல்லவா?” என்று கேட்டான் சீனு.

“அது பெண் மயிலடா. அதற்குத் தோகை கிடையாது” என்றார் மாமா.

"ஏன்? ஆண் மயிலுக்கு மட்டும் ஏன் இருக்கிறது?" என்று விடாமல் கேட்டான் அவன்.

"ஆண் மயில் கல்யாணப் பிள்ளை. நாளைக்கு நான், உன் மாமா, மாப்பிள்ளை அழைப்புக்கு எப்படி 'டிரெஸ்' செய்து கொள்வேன்? அது போல இதுவும் செய்துகொண்டு ஆடுகிறது" என்று விளக்கினார் மாமா.

"அப்படியானால் இது மட்டும் கல்யாணப் பெண் இல்லையாக்கும்" என்றான் சீனு, திருப்தியுறாமல்.

"எனக்குத் தெரியாது போடா. அதையே போய்க் கேள்" என்று கூறிவிட்டு மாமா தனக்குத் தெரிந்த ஒருவருடன் பேசப் போய்விட்டார்.

சீனு பறவைகளுடன் பேசுவான், அவைகளும் அவனுடன் பேசும் என்பது மாமாவுக்கு என்ன தெரியும்! சீனு அவர் சொன்ன பேச்சை அப்படியே நடத்த மயில் அருகே போய் நின்றான். அவன் பார்த்த பார்வையில் மயிலே அவனோடு பேச முன்வந்தது.

சீனு ஒரு பெருமூச்சை உள்ளே இழுத்துக்கொண்டான். என்ன அழகு! என்ன அழகு! எத்தனை நிறங்கள்! வானவில் பறவை வடிவத்தில் இறங்கி வந்து முருகனுக்கு வாகனமாக நின்றதோ என்று யோசித்தான் சீனு. 'வானவில்லை விட ஆழ்ந்த நிறங்கள், இதை அப்படியே படம் வரைய முடியுமா? போட்டேனானால் டிராயிங் வாத்தியார், இன்ஸ்பெக்டர் வரும்போது கண்காட்சியில் கூட வைத்து விடுவாரே!' என்று ஓடியது அவன் மனம். உடனே

"போ, மாமா, எனக்கு இறக்கை எல்லாம் பிடுங்கப் பிடிக்காமல் போய்விட்டது. இவ்வளவு அழகான பட்சியை ஏமாற்றலாமா என்று தோன்றி விட்டது" என்றான் சீனு.

"அழகுக் கடவுள் முருகன். அவருக்கு அழகே வடிவான வாகனம்தானே இருக்க முடியும்?" என்றார் மாமா.

"ஆமாம், மாமா!" என்றான் சீனு. உணர்ச்சியினால் அவன் நெஞ்சு அடைத்தது. வீடு வரும்வரை அவன் பேசவே இல்லை. அவன் அம்மாவைக் கண்டதும் மாமா, "அக்கா, உன் பிள்ளை சாமியே பார்க்கவில்லை, மயிலைத்தான் பார்த்தான்" என்று சொன்னார்.

"மயிலைக் காக்காய் பிடித்தால் முருகனைத் தன்னிடம் தூக்கிக் கொண்டு வந்துவிடும் என்று எண்ணம் போலும்" என்றாள் சீனுவின் தாயார்.

"இல்லை அம்மா, எப்படி இருந்தது தெரியுமா! பாதாம்அல்வா, ஐஸ்கிரீம், காராபூந்தி, சூடான கீரை வடை எல்லாம் சாப்பிட்ட மாதிரி இருந்தது" என்றான் சீனு.

"நம்ப பையன் இருக்கிறானே? அவனுக்கு வயிறு தான் முதல் தெய்வம்," என்று கூறிச் சிரித்தாள் தாய்.

சீனு வெட்கித் தலை குனிந்தான்.

"பரவாயில்லையடா, நீ ஏன் கவலைப் படுகிறாய்? நம்ப பிள்ளையார் கூடப் பார். உன்னைப்போல்தான்

தொங்கி போட்டுக் கொண்டிருக்கிறார்'' என்றார் மாமா.

அவர் கேலி செய்கிறாரா, சமாதானம் கூறுகிறாரா என்பது சீனுவுக்கும் புரியவில்லை. ஆனாலும் தொங்கி விஷயத்தில் கொஞ்சம் திருப்தியாகத்தான் இருந்தது.

''ஏனடா சீனு, பெண்மயிலைப் பார்த்தாயே, அதன் நிறம் என்ன சொல் பார்க்கலாம்—கொண்டை இருக்கிறதா?'' என்று கேட்டார் மாமா.

''சொல்லத் தெரியவில்லை, மாமா—கொண்டை இருக்கிற மாதிரித்தான் இருந்தது.'' என்றான் சீனு.

''நான் சொல்லட்டுமா?'' என்று கேட்டார் மாமா.

''உங்களுக்கு எப்படி மாமா எல்லாம் தெரியும்?''

''நான் பட்சி சாஸ்திரம் படித்திருக்கிறேனடா. மண்டு'' என்றார் அவர்.

சீனுவுக்கு உடனே நினைவு வந்தது அவர் தனக்கு வரப்போகும் மனைவியை வருணித்தது—'கிள்ளை மொழி, குயில் குரல், மயில் மேனி, குருவிக் காரியம்'

''சொல்லுங்கள், மாமா, எழுதிக் கொள்கிறேன்'' என்றான் சீனு.

மாமா சொல்லச் சொல்ல சீனு புத்தகத்தில் குறித்துக்கொண்டான்.

''தென்னிந்தியாவில் சேலம் மாவட்டத்தில் மேட்டூர் அணைப் பகுதியில் காணலாம். பெண் மயில் தலை ஒருவித பழுப்பு நிறம். கொண்டை ஆண் மயில்

போல்தான்— நுனியில் பசுமை மோலோங்கி இருக்கும். பலவித பழுப்பு நிற உடல். வெள்ளை நிறம் அங்காங்கே தெரியும். மற்றப்படி கழுத்தெல்லாம் பளபளப்பான தகடு போன்ற பச்சை. பச்சையும் பழுப்பும்தான் மார்பிலும் கீழ் வயிற்றிலும். எல்லாம் மாறி மாறி வரும். மயிலுக்குக் கண் அழகாக இருக்கும். நம் கண்களைப் போல விழியும், அதை எடுத்துக் காட்டுவதற்கு அமைந்தது போல இரண்டு வெள்ளைக் கோடு இரண்டு புறமும் ஓடும்."

அதற்குள் சீனுவின் தகப்பனார் வந்து விட்டார். மாமா எழுந்து போய் விட்டார். சீனு தோட்டத்திற்குப் போய் உட்கார்ந்து கொண்டான். மாலையில் பறவைகள் வீடு திரும்பலாயின. ஆகாயத்தைச் சந்தையிடமாக ஆக்கிக் கொண்டு இருந்தன காக்கைகள். சீனுவை அணுகி ஒரு காக்கை வந்து உட்கார்ந்தது.

"சலங்கையா ?" என்று கேட்டான் சீனு.



"உனக்கு ஏன் என்னை அடையாளம் தெரியமாட்டேன் என்கிறது?" என்று கேட்டது சலங்கைக் காக்கை.

சீனு பேசாமல் இருந்தான்.

"புது நண்பர்கள் கிடைத்து விட்டதனால் உனக்கு என் நினைவு இல்லை" என்று பிணங்கியது அது.

"யார் வந்து விட்டார்கள் புது நண்பர்கள்?" என்றான் சீனு ரோசமாக.

"நீதான் இன்றைக்குக் கோவில் மயில்களை வைத்த கண் வாங்காமல் பார்த்தாயே?"

"அதுவா உனக்குப் பொறுமை? மயில் அழகாக இல்லையா, நீயே சொல்."

"யார் இல்லை என்றார்கள்? அதற்காகப் பழைய நண்பர்களையே மறந்துவிடவேண்டுமா? நான் கோவில் கோபுரத்திலிருந்து உன்னைக் கூப்பிட்டேன்; நீ வலம் வரும்போது கூடவே வந்தேன். நீ என்னைச் சட்டை செய்யவேயில்லை" என்று குறைபட்டுக் கொண்டது காகம்.

"நான் செய்தது தப்புதான், மன்னித்துக் கொள், சலங்கை" என்றான் சீனு, பணிவாக.

"உனக்கு இப்பொழுது மயில் மீதுதான் மோகமாக இருக்கிறது அல்லவா? வா, நிறைய மயில் இருக்கிற இடத்தை உனக்குக் காட்டுகிறேன்," என்றது சலங்கைக் காகம் உடனே.

"இப்பொழுதா? இருட்டப் போகிறதே?" என்றான் சீனு. மறு நாளைக்குக் கணக்குப் பரிட்சை வேறு இருந்தது.

"இப்பொழுதில்லை. காலையில் எழுந்ததுமே வந்துவிடு. பக்கத்துத் தோப்புக்கு அழைத்துப் போகிறேன்" என்றது சலங்கைக் காகம்.

மறுநாள் விடியும் முன்பே சீனு எழுந்து விட்டான். அவன் அம்மா சமையலறையில் வேலை

செய்ய விளக்குப் போட்டிருந்தான். அங்கேயே போய் உட்கார்ந்து கணக்குப் போட்டுப் பார்த்தான்.

"ஏனடா இன்னிக்கு இவ்வளவு சீக்கிரம்?" என்று கேட்டாள் தாய்.

"கணக்குப் பரிட்சை, அம்மா" என்றான் சீனு. பிறகு மெதுவாக, "அம்மா" என்று மீண்டும் அழைத்தான்.

"ஏனடா, கண்ணு?"

"நான் கொஞ்சம் தோப்புக்குப் போய்விட்டு வருகிறேன், அம்மா. அப்பா கேட்டால்........."

"போ, ஆனால் சீக்கிரம் வந்துவிட வேண்டும். அங்கே சிற்றாறு ஒன்று ஓடுகிறது. அதிலே இறங்கி ஏதாவது குறும்பு செய்யாதே" என்றாள் தாய்.

"இல்லை, அம்மா" என்றான் சீனு, குஷியாக.

கிழக்கில் சூரியன் உதயமாவதற்கும் காகம் அழைப்பதற்கும் சரியாக இருந்தது. அவன் தன் புத்தகங்களை வைத்துவிட்டுக் காக்காயுடன் கிளம்பினான்.

தோப்பு நன்றாக குளுகுளுவென்று இருந்தது. அருகே ஆறு சலசலத்தது. தூரத்தில் மலைத்தொடர் நீலமாகப் பனி வலையில் தெரிந்தது. காட்சி மிகவும் சாந்தமாகவும் ரம்மியமாகவும் இருந்தது. அவன் பராக்குப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஒரு மயில் வேகமாகப் பறந்து வந்தது. சில பெரிய பட்சிகளைப் போல காற்றை வெட்டிக் கொண்டு நீந்தி வரவில்லை. ஒரே நிதானமாக, மெதுவாகச் சிறகை

ஆட்டி, பெரியவர்கள் கைத்தடி ஆட்டுவதுபோல அளவாக அடித்துக் கொண்டு பறந்து வந்து அமர்ந்தது ஒரு மரக்கிளையில். தோகை நீளமாகத் தொங்குவதைச் சூரிய கிரணத்தில் தோய்த்துப்



பார்க்கும்போது சீனுவின் கண்கள் விரிந்தன. ஆனாலும் சலங்கை வருத்தப்படுமோ என்று அவன் தன் ஆவலைக் காட்டிக் கொள்ளாமல் நிறுத்திக் கொண்டான்.

"சீனு, இந்த மயிலுடன் நீ பேசிக்கொண்டிரு. நான் போய்விட்டு வருகிறேன். சாயங்காலம் பார்க்கலாம்" என்று அவனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்று விட்டது காகம்.

மயில் அப்பொழுதுதான் சீனுவைப் பார்த்தது. சீனுவும் ஆசையோடு அந்த மரத்தின்மீது ஏறி, அதன் அருகில் அமர்ந்து கொண்டான்.

"உன் பெயர் சீனுவா?" என்று அன்புடன் விசாரித்தது மயில்.

"எப்படித் தெரிந்தது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் சீனு.

"என் நண்பன் காக்காய் சொல்லிற்று. அதை நீ 'சலங்கை' என்று கூப்பிடுவாயாமே?"

"ஆமாம், அது எனக்கும்தான் நண்பன்."

"உனக்குப் பறவைகளைப் பற்றித் தெரிந்துகொள்வதில் ஆசையாமே?"

"ஆமாம். எனக்கு உன் பிறப்பு, வளர்ப்புப் பற்றியெல்லாம் கேட்க ஆவலாக இருக்கிறது. நான் இன்றைக்குப் பள்ளிக்கூடம் போய் பரிட்சை வேறு எழுத வேண்டும். சீக்கிரம் சொல்லுவாயா?" என்று கேட்டான் சீனு.

"இதற்கென்ன பிரமாதம்? நாங்கள் காட்டில் வசிக்கும்போது இந்தமாதிரி செடிகள் அடர்ந்த நீரோட்டம் இருக்கிற இடத்திலே மலைகள் மத்தியில் வாழ்வோம். இந்தத் தோப்பு நாங்கள் பிறந்த இடம் போல இருப்பதனால் இதை நாடுகிறோம்," என்று ஆரம்பித்தது மயில்.

சீனு ஆவலுடன், பாயசம் குடிப்பதுபோல, காதால் பருகலானான்.

"நாங்கள் கும்பல் கும்பலாக இருப்பது வழக்கம். இப்படியே ஆனந்தமாக, சோம்பேறித் தனமாகப் புல், பூண்டு, சின்ன புதர், செடிகள் ஆகிய இவற்றின் அடியில் கிடப்பதை உண்போம். சில சமயம் அக்கம்

பக்கத்தில் வயல்கள் இருந்தால் போய் விதைகளைத் தின்போம்."

"நீ பறப்பாயா? உனக்குப் பறக்கத் தெரியாது என்று நினைத்தேனே?"

"சாதாரணமாக நான் பறப்பதில்லை. நாங்கள் சங்கோஜப் பிராணிகள்—நீங்கள் எல்லாம் வந்தால் விடுவிடுவென்று ஓசைப்படாமல் நடந்து ஓடுவோம். அப்படியும் தொல்லை கொடுத்துத் துரத்தினால் பறப்பதுதான்" என்றது மயில், அலட்சியமாக.

"சங்கோஜமாம்! கோவிலில் வைத்துக் கொள்கிறார்களே, அப்பொழுது மட்டும்?" என்று கேட்டான் சீனு, நம்பாமல்.

"நீ நம்பாவிட்டால் நாங்கள் என்ன செய்வது? நாங்கள் சுபாவத்தில் சங்கோஜிகள்தாம். ஆனால், நம் பாரத நாட்டிலே திருமுருகனுடைய வாகனம் என்றும், ஸ்ரீ கிருஷ்ணருக்குப் பிரீதி என்றும் எங்களைப் போற்றுகிறார்கள். அப்பொழுது இருப்பதற்கு என்ன? அன்புக் கட்டளையை மறுக்க முடியுமா?"

"அழகாகப் பேசவும்தான் தெரிகிறது" என்றான் சீனு.

"என் குரல் கர்ணகடூரம் என்கிறீர்களே நீங்கள்!" என்றது மயில்.

"நான் குரலைக் குறிப்பிடவில்லை. அது என்ன நன்றாகவா இருக்கிறது? ஒரு ராட்சஸப் பூனை கத்துவதுபோல 'மியோவ்' என்று கத்துகிறாயே?"

"மழையை வா என்று அழைப்பதாகச் சிலர் நினைக்கிறார்கள்" என்று கூறிப் பெருமையுடன் சிரித்தது மயில்.

"உனக்குக் கர்வம் அதிகம் என்று நினைக்கிறேன். உன் அழகில் உனக்குப் பெருமைதானே?" என்றான் சீனு கிண்டலாக.

"சில சமயம் கர்வமாகத்தான் இருக்கும். ஆனால் என்ன பிரயோசனம்? வெள்ளைக்காரர் யாராவது வந்தால் சுட்டுக் கொன்று விடுகிறார்களே."

"உன்னையா சுடுவார்கள்? ஐயோ!"

"சாப்பிடுவார்களே அவர்கள்!" என்றது மயில்.

சீனுவின் கண்களில் நீர் குபுகுபு வென்று வழிந்து விட்டது. அதைப் பார்த்த மயில் சட்டென்று பேச்சை மாற்றிவிட்டது.

"என் வீட்டை நீ பார்க்கவில்லையே?" என்றது அது.

"மயில் கூடு கட்டுமா?" என்றான் சீனு.

"கூடு என்றால் கூடு இல்லை அது. சும்மா தரையிலே சிறு குழி தோண்டி அதில் முட்டையை இட்டு இலைகளைப் போட்டு மூடி வைப்பது. நாங்கள் மரங்களின் மீது கும்பலாக உறங்கிக் கொள்வோம். ஆனால்........."

"ஆனால் என்ன?" என்று கேட்டான் சீனு. மயிலின் முகத்திலே கர்வமும் இறுமாப்பும் தெரிந்தன.

"அதெல்லாம் பெண்கள் பாடு. நான் தலையிடுவதில்லை" என்றது மயில்.

"உனக்குப் பெண்களா ?" என்றான் சீனு.

"அட, மக்கு! என் மனைவிகள் ஐந்து, ஆறு பேர் இருப்பார்கள். அவர்கள் பார்த்துக் கொள்வார்கள். நாங்கள் குடும்ப விஷயத்தில் தலையிடுவதில்லை."

"சரி, அப்படியே அரசனாகத்தான் இரு. ஆனால் நான் உன் முட்டைகளைப் பார்க்க வேண்டுமே?' என்று கேட்டான் சீனு.

"அதற்கென்ன, வாயேன் காட்டுகிறேன்," என்று அவனை அழைத்துக் கொண்டு தரையில் இறங்கி ஒரு செடி மறைவில் இலைகளைத் தள்ளிக் காட்டியது மயில்.

மூன்று முட்டைகள் இருந்தன. சீனுவின் முஷ்டி அளவு இருந்தது ஒவ்வொரு முட்டையும். நிறமோ மான்தோல் நிறத்தில் மிகவும் லேசான நிறம். சில கொஞ்சம் கடுக்காய் மஞ்சள் நிறமாக இருந்தன. ஒன்றில் மண்நிறப் புள்ளிகள் இருந்தன. இரு நுனியும் சப்பையான நீண்ட கோளமான உருவம்.

"இந்த மனைவி மூன்றுதான் இட்டு இருக்கிறாள். சில சமயம் ஏழு, எட்டுகூட இருக்கும்."

அலட்சியமாக அங்கிருந்து புறப்பட்டு ஒரு காலைச் சிறிதே தூக்கிக் கொண்டு தோகை விரித்துக்கொண்டு தலையைச் சாய்த்து மதத்தோடு பார்த்தது மயில்.

அதன் இறுமாப்பை நினைத்தால் சீனுவுக்குச் சிரிப்பு வந்தது. ஆயினும் அதை அடக்கிக் கொண்டு

கீழே காலைப் பார்ப்பது போல அவன் தன் தலையைத் தாழ்த்திக் கொண்டான். அப்பொழுது அதன் காலுக்கு மேலே பின் பக்கத்தில் முள்போல் ஒன்று இருந்தது.

"என்ன பார்க்கிறாய்? என் தோகையில் எத்தனை கண்கள் என்று கணக்குப் போடுகிறாயா?" என்று கேட்டது மயில்.

"அம்மாடியோவ்! கணக்குப் பரிட்சைக்குப் போகவேண்டுமே?" என்று திடீரென்று நினைவு வந்தவனாகச் சீனு ஓட்டம் பிடித்தான்.

"நாளைக்கு வருகிறேன், பொரி கடலையுடன்!" என்று கூறிக்கொண்டே ஓடினான் அவன். மயில் அவனை வழி அனுப்பிவிட்டுத் தரையில் ஏதாவது புழு, பூச்சி, நத்தை அகப்படுமா என்று தேட லாயிற்று.



"சீனு, வாடா கோவிலுக்குப் போய்விட்டுவரலாம்," என்று அவனை அழைத்தாள் அவன் தாய்.

கோயில் மயில்களைப் பார்க்கலாம் என்ற ஆசையில் அவனும் கிளம்பிவிட்டான். அவன் அம்மா நவக்கிரகத்தைச் சுற்றப் போனபோது சீனு எதிரே மணலில் உட்கார்ந்திருந்தான். அவன் வகுப்புப் பையன் ஒருவன் அங்கு வந்து அவனுடன் பேச்சுக்கொடுத்தான்.

"சீனு, சர்க்கஸ் வந்திருக்காமேடா?" என்று கேட்டான் அவன்.

"நீ பார்த்து விட்டாயா? யானை, சிங்கம் எல்லாம் வந்திருக்கிறதா?" என்று ஆவலுடன் கேட்டான் சீனு.

"இன்னும் ஆரம்பிக்கவில்லை. இன்று காலையில்தான் எல்லாம் வந்து இறங்கி இருக்கின்றனவாம். பெரிய கொட்டகையாம்!" என்று கைகளையும் விரித்து எவ்வளவு பெரிசு என்று காட்டினான் அந்தப் பையன்.

சீனு இருகால்களையும் முட்டிபோட்டு அமர்ந்து நண்பன் சொல்லும் ஒவ்வொரு சேதியையும் ரசித்துக் கேட்டான்.

"சீனு, இந்தக் கோபுரத்தின் மேலே ஏறிப் பார்த்தால் மைதானம் நன்றாகத் தெரிகிறதாமடா!" என்றான் நண்பன்.

சீனு உடனே எழுந்து விட்டான். கோயில் காப்பான் ஒருவனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு வழியும் தெரிந்துகொண்டு கிளம்பிவிட்டான் அவன். அவன் தோழனும் உற்சாகமாக வந்தான். இரு பிள்ளைகளும் விறு, விறு வென்று ஏறிவிட்டார்கள். ஒவ்வொரு உயரம் வந்ததும் அந்த வாயில் போன்ற இடங்களில் நின்று வேடிக்கை பார்த்தனர். கோயில் காப்போனும் கூடவே வந்திருந்தான்.



அப்பப்பா! கோயில் கோபுரத்திலிருந்து பார்க்கும்போது எவ்வளவு அழகாக இருந்தது! வீடுகள் எல்லாம் கீழே பொம்மை வீடுகள்போல் தெரிந்தன. அவன் நிமிர்ந்து பார்க்கப் பயப்பட்ட அம்மாமார், அப்பாமாரெல்லாம் குட்டிக் குட்டி மனிதர்களாகத் தெரிந்தனர். கொஞ்சங்கூடப் பயமாக இருக்கவில்லை. முயல் குட்டிகளைப்போல அவர்கள் இங்கும் அங்கும் ஓடுவதுபோலத் தோன்றியது சீனுவுக்கு.

"சீனு, அதோ பாருடா! எல்லாக் கூண்டு வண்டிகளையும் வரிசையாக நிறுத்தியிருக்கிறார்கள். கூடாரம்

போடுவதைப் பார். எறும்புகள் வீடு கட்டுவது போல தெரிகிறது" என்றான் நண்பன்.

"ஆமாம்டா" என்றான் சீனு,

"இங்கே ஒரே குப்பை. செ! யாரும் பெருக்குவதில்லைபோலத் தெரிகிறது" என்றான் நண்பன்.

"குப்பையை ஏண்டா பார்க்கிறே? இங்கேயிருந்து ஊரைப் பார், எவ்வளவு ஜோராக இருக்கிறது!"

"போதும் வாடா, இறங்கிவிடலாம். எங்கள் அப்பா,. அம்மா, தேடுவார்கள்" என்று கூறிவிட்டு நண்பன் இறங்கிவிட்டான். காவற்காரன் சீனுவையும் அழைத்தான்.

"நீ போ, அப்பா. நான் இன்னும் கொஞ்சநேரம் இருந்து விட்டுப் போகிறேன்" என்றான் சீனு.

'பட்சியாக இருந்து பார்த்தால் உலகம் இப்படித் தானே தென்படும்?' என்று நினைக்கும்போது அவனுக்கு ஆனந்தமாக இருந்தது.

இன்னமும் மேலே ஏறப்போனான் சீனு.

"இந்தா, தம்பி. பார்த்தியா? நீ செய்கிற வேலை என்ன என்று கேட்கிறேன்? சும்மா, இறங்கி வா. அப்புறம் விழுந்து கிழுந்து வைத்தால் வீண் வம்பு!" என்று அவனை அதட்டிக் கூப்பிட்டான் காவற்காரன்.

"மேல் கலசம்வரை போய்ப் பார்த்துவிட்டு வருகிறேனே? நான் பத்திரமாக வருவேன்!" என்று கெஞ்சினான் சீனு.

"வேண்டாம், வேண்டாம் வா. மேலே போகப் போக புறாக்கூடு அதிகம். இந்தக் கோபுரம் முழுதும் புறாக்களின் ஆட்சிதான்" என்றான் காவற்காரன்.

"அப்படியா? புருக்கூண்டு எங்கே? அதில் முட்டை இருக்கிறதா?"

"நல்ல பையனப்பா நீ! இதோ பார். இங்கே கூட கூடு இருக்கிறது" என்றான் காவற்காரன்.

"ஐயோ, இதென்ன கூடு!" என்று வியந்தான் சீனு.

"ஏன். எப்படி இருக்கும் புருக்கூடு?" என்று கேட்டான் கோவில் காப்போன்.

"புருக்கூடு தெரியாது. குருவிக் கூடு, காக்காய்க் கூடு, கிளிக்கூடு, எல்லாம் பார்த்திருக்கிறேன். இது என்ன பொம்மைக் கொலுப் பந்தல்போல இருக்கிறது. அதில் இருக்கிற முட்டைகூட வெளியிலே அப்படியே குச்சி நடுவில் தெரிகிறதே?" என்றான் சீனு.

"அது அப்படித்தான் கட்டும். இரண்டு முட்டைக்கு மேலே இடாது ஒரு சமயத்திலே. ஆனால் ஆண்டு முழுவதும் நம் தேசத்திலே எல்லாம் முட்டையிடும். அதனாலே புருவினத்தை, மனிதன், பூனை, கழுகு, எது கொன்றாலும் உடனே செழித்துவிடும்" என்றான் காவலாளன்.

"உனக்குப் புருக்களைப்பற்றி எல்லாம் தெரியுமா?" என்று விசாரித்தான் சீனு.

"தெரியும், தெரியும். நீ இறங்கி வா, சொல்கிறேன்" என்று அவனை அழைத்துக்கொண்டு இறங்கிவிட்டான் காவற்காரன்.

சீனு கோபுரத்தையே அண்ணாந்து பார்த்துக் கொண்டு நின்றான். அப்பொழுதுதான் அவன் கவ

னித்தான். கோபுரத்தின் பக்கவாட்டத்தில் கோபுரச் சிற்பங்களின் நடுவே, அவைகளுக்குப் போட்டியாக ஒரு புறுக் கூட்டம் இருந்தது.

சில பையன்கள் கீழே பொரிகடலை இரைத்ததும் சில கீழே பறந்து வந்து கொரிக்க ஆரம்பித்தன. சீனு அவைகளின் அருகில் சென்றாலும் அவை ஒன்றும் பொருட்படுத்தாமல் தங்கள் உணவில் லயித்தன.

பெரும்பான்மையானவை ஒருவித அழகான நீலமாக இருந்தன. முன்பு மயிலைக் காணச் சோலைக்குச் சென்றபோது தூரத்தில் பனி மூடிய மலைத்தொடர் காட்டிய வர்ணம்—நீலப்புகை வர்ணம் கண்ணுக்கு மிக மிக இதமாக இருந்தது.

சுமார் ஓரடி நீளம் இருந்தது புறு. ஓரே நிதான மான நீலம் உடல் முழுவதும். சில பட்சிகளைப்போல பல வர்ணங்கள், அதிலும் கண்ணைப் பறிக்கும் நிறங்களாக உடலில் நிறைத்துக் கொள்ளவில்லை. அது கோழி, மயில்போல கொண்டையும் தோகையும் வைத்துக்கொள்ளவில்லை. மழமழவென்று பட்டுப் போல மிகவும் நன்றாக இருந்தது இந்தப் பறவை. கழுத்தில் மட்டும் பச்சையும் ஊதாவும் பளபள வென்று 'டால்' அடித்தது. மற்ற இடங்களைவிட இறக்கைகளும் முதுகும் சற்று ஆழ்ந்த நிறத்தில் இருந்தன. இறக்கைகளில் இரண்டு கறுப்புப் பட்டைகள் தீட்டப்பெற்றிருந்தன. வாயின் நுனியில் கறுப்புப்பட்டை இருந்தது. கீழ்ப் பாகமெல்லாம் சில புறுக்களுக்கு வெண்மையாகவும், சிலவற்றிற்கு வெளுத்த சாம்பல் நிறமாகவும் இருந்தது.

சீனு உதட்டைக் குவித்து அன்பாக அருகிலிருந்த ஒரு புறுவை அழைத்தான். அது உடனே அவன் தோளின்மீது வந்து உட்கார்ந்துகொண்டது. அதை அன்புடன் தடவிக்கொடுத்தான் அவன். அதன்



விழி ஆரஞ்சுப் பழுப்பாக இருந்தது. அலகு நுனியில் கறுப்பாகவும் அடியில் வெள்ளையாகவும் இருந்தது. கால் இரண்டும் ரோஜாநிறச் சிவப்பு. வால் என்று சொல்வதற்கு அதிகம் இருக்கவில்லை. இறக்கை இரண்டும் நீளமாகவும் நுனியில் கூர்மையாகவும் இருந்தன.

“இந்தப் புறு இல்லாத ஊர் இல்லை என்று நினைக்கிறேன்” என்றான் கோயில் காப்பான்.

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?" என்று கேட்டான் சீனு.

"இந்தக் கோயிலில் கும்பிடறத்துக்கு எத்தனை பேர் வருகிறார்கள் - இமயமலைச் சாரலிலிருந்து குமரி முனைவரை இருக்கிற மனிதர்களெல்லாம் இங்குக் கூடுகிறார்களே-அவங்க சொல்லித்தான் தெரிகிறது."

"அங்கெல்லாம்கூட இதே நிறம்தானா?" என்று ஆவலுடன் கேட்டான் சீனு.

"இமயமலையில் எல்லாம் வெள்ளையாக இருக்குமாம்" என்றான் காவற்காரன்.

"நீலகிரிப் புறா என்பது மேற்குத்தொடர்ச்சிமலை முழுவதும் இருக்கும். அது தலையிலே சாம்பல் நிறம், கழுத்து கறுப்பும் வெள்ளையும் பூப்போட்ட மாதிரி இருக்கும். முதுகுப்புறம் செம்மண் நிறமும் கருமையும் கலந்தமாதிரி இருக்கும். வயிற்றுப் பக்கம் பளபளப்பான சாம்பல் நிறம்" என்று சீனு தோளின் மீது இருந்த புறா பேசியது.

சீனு புன்சிரிப்போடு அதை நோக்கினான்.

"இன்னும் எத்தனை மாதிரி இருக்கிறீர்கள்?" என்று விசாரித்தான் சீனு.

"ஏன்-ஆப்பிரிக்கா கண்டம், ஆசியா கண்டம், இலங்கை, இந்தியா, பர்மா, எல்லா இடங்களிலும் இருக்கிறார்களே, எத்தனை நிறம் இருக்க முடியாது?"

"இருக்காது என்று சொல்லவில்லை. எத்தனை விதம் இருக்கிறீர்கள் என்றுதான் கேட்டேன்" என்றான் சீனு.

"இதோ. கீழே கூடியிருக்கிற கூட்டத்தைப் பாரேன். கருமையான புருக் கூட ஒன்று இருக்கிறது, பார். சில நனைந்த அடுப்புச் சாம்பல் நிறம்போலக் கூட இருப்பதுண்டு. அதோ ஒன்று இருக்கிறது,



பார். முக்கால்வாசியும் கலப்படம்!" என்றது புரு, நீலப் புரு கலப்படமற்றது என்று பறை சாற்றுவது போல.

"கலப்படமற்ற பாரத ஜாதி இருக்கிறதா?" என்று சீனு கேட்டான்.

"சுமார் பத்து வகை இருக்கிறது. அதில் ஒன்று பழுப்பும் மிகவும் லேசான வெண்மையான கத்திரிப்பூ நிறத்தில், கழுத்தில் கறுப்புப் பட்டையோடு இருக்கிறது. அதை வேண்டுமானால் நம் தேசியப் புரு என்று கூறலாம்."

"எல்லோரும் இப்படியே கோபுரத்தில்தான் இருப்பீர்களா?"—இது சீனுவின் கேள்வி.

கோயில் காப்போன் எங்கோ பார்த்துக்கொண்டிருந்தவன் சீனு புருவுடன் பேசிக் கொண்டிருக்கிறன் என்று அறியாமல் திடீரென்று பதில் கொடுத்தான்.

"எல்லாம் கோபுரத்திலே ஏன் இருக்குது? மசூதியிலே போய்ப் பார், எம்மாம் புரு கஜகஜன்னு கிடக்குது!" என்றுன் காவற்காரன்.

"நம் தேசத்திலே எங்களுக்குச் சாப்பாட்டுக்குக் குறைவில்லே. கடைக்காரர்கள், பக்திமான்கள் யாராவது ஏதாவது இரைக்காமல் போகமாட்டார்கள்" என்றது புரு.

சீனு, காவற்காரனைப் பார்த்துப் பேசினுன். "புருவைக் கொன்று தின்பவர்கள் இருக்கிருர்களா?" என்று கேட்டான்.

"வெள்ளேக்காரங்க சாப்பிடுவாங்க, எனக்குத் தெரியும். பின்னேயும் யாராவது சாப்பிடுவாங்களான்னு எனக்குத் தெரியாது."

"செ, செ, இவ்வளவு சாதுவான அழகான பறவைகளைச் சாப்பிடுவதா?" என்று அங்கலாய்த்தான் சீனு.

"வயல்லே வெளியிலே போய்ப் பாருங்க, விதைத்த விதையை யெல்லாம் பயிரையெல்லாம் போய் நாசம் செய்து வருங்க" என்றுன், காவற்காரன். இதற்குள் கோவில் நிர்வாகஸ்தர் வந்துவிடவும் அவர்களுடன் அவன் அலங்கார மண்டபத்திற்குப் போய்விட்டான்.

"அவன் சொல்வது உண்மையா?" என்று கேட்டான் சீனு நம்பாமல்.

"ஆமாம். பின்னே, இங்கே இரைப்பதையே உண்டு திரிந்தால் சோம்பேறிகளாக ஆகிவிடுகிறோம். அதைத் தடுப்பதற்காக நாங்கள் இப்படி 'பிக்னிக்' கிளம்புவதுதான்!" என்றது புறா!

"எங்கே—பறந்து காட்டு?"

புறா அவனுக்குப் பறந்து காட்டுவதற்காக நேரே உச்சிக்குப் பறந்ததுதான் தாமதம், கீழே இருந்த கும்பல் அத்தனையும் ஒரே முட்டாகக் கிளம்பிவிட்டது!

சீனுவின் அம்மா அவனைத் தேடிக்கொண்டு வந்து விட்டாள். "ஏனடா, கோவிலுக்கு வந்தால், பிள்ளையாருக்குக் குட்டிக்கொண்டு தோப்புக் கரணங்கூடப் போடுவதில்லையோ? வரவர புத்தி கெட்டுத்தான் போகிறது!" என்று அன்னை அவனைத் திட்டவும், அவன் நேரே பிள்ளையார் சந்நிதிக்குப் போய்க் குட்டிக் கொண்டு, தோப்புக் கரணமும் போட்டு விட்டு வந்தான்.

அப்பொழுது கோவிலுக்கு முன் சிதறுகாய் போட்டுக்கொண்டிருந்தார்கள். சீனு சிதறிய ஒரு துண்டத்தை எடுத்து வைத்துக்கொண்டான். அவன் தாய் அவன் தலையில் ஒரு குட்டு வைத்தாள். "அதை எதற்குப் பொறுக்கினாய்? யாராவது ஏழைக் குழந்தைகள் கொண்டு போகட்டுமே!" என்றாள்.

"எனக்கில்லை அம்மா!" என்றான் சீனு. சலங்கைக் காக்காய்க்காக என்றால் அம்மா கேலி செய்வாளோ

என்று மேலே சொல்லாமல் அவன் அவளுடன் நடந்தான்.

அவர்கள் வீட்டிற்குள் நுழையும்போது சலங்கைக் காகம் தயாராகக் காத்திருப்பதுபோல தாழ்வாரத்து ஓரத்தில் நின்று கொண்டிருந்தது.

"சலங்கை, இந்தா உனக்குத் தேங்காய்" என்று அன்போடு கூவிக்கொண்டே சீனு அதை நெருங்கினான்.

"சீனு, நான் வேறே ஊருக்குப் போகப் போகிறேன். உன்னிடம் சொல்லிவிட்டுப் போகலாம் என்று வந்தேன்" என்றது காகம்.

"ஐயோ, உன்னை விட்டு நான் எப்படி இருப்பேன்? உன்னால்தான் நான் பல விஷயங்கள் கற்றுக் கொள்ள முடிந்தது."

"நான் வருவேன், கொஞ்ச நாட்கள் கழித்து. இப்பொழுது கொஞ்சம் வேலை இருப்பதனாலே போக வேண்டியிருக்கிறது" என்றது சலங்கைக் காக்காய்.

"இதுதான் நண்பனுக்கு அடையாளமா?" என்று நிஷ்டூரமாகப் பேசினான் சீனு.

"நீ கூடத்தான் நாளைக்கே உன் சின்ன மாமாவுக்குக் கல்யாணம் என்றால் ஓடிவிடுவாய். அப்பொழுது நான் உன்மீது கோபித்துக்கொள்வதா?"

"அப்படிச் சொல்! உனக்கு மாமாமீது கோபம்—அதுதானே?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் அவசியம் போகவேண்டியிருக்கிறது. அதனால்தான் போகிறேன். என்னை நம்பு."

"அப்படியானல் எப்பொழுது திரும்பிவருவாய்?" என்று மிகமிக ஏக்கத்துடன் கேட்டான் சீனு.

"உன் அம்மா மாட்டுப் பொங்கல் அன்றைக்குக் கலர்கலராகச் சோறு பிசைந்து மேல் மாடியில் வைத்துப் படைப்பார்களே? அதற்குள் வந்து விடுகிறேன்."

"கனுவு என்பார்கள். அன்று காக்காய்க் கெல்லாம் கல்யாணமாம்!" என்ருன் சீனு.

"நீ 'காக்காய் பிடித்தல்' என்று கேள்விப்பட்டிருக்கிருய் அல்லவா? நாள்தோறும் உன் அம்மா கரண்டி சாதத்தைப் போடுவதைப் பார்த்திருப்பாயே —அது எதற்குத் தெரியுமா? திவச நாள் அன்றும், கனுவு அன்றும் நான் வராமல் இருந்து விடப் போகிறேனே என்று நாள்தோறும் லஞ்சம் கொடுப்பதுபோல அன்னத்தைப் போடுகிருர்கள்."

சீனு இதைக் கேட்டுக் கல கலவென்று சிரித்து விட்டான். காகமும் மகிழ்ச்சிப்பெருக்கோடு சிரித்தது.

"அது சரி, இன்றைக்கு நீ எங்கே எல்லாம் போனுய்? யார் யாரைப் பார்த்தாய்?" என்று வம்பு பேச ஆரம்பித்தது காகம்.

"சலங்கை, இன்றைக்குக் கோவிலுக்குப் போயிருந்தேன். ஒரு சாமியும் பார்க்கவில்லை. புருக்களுடன் இருந்துவிட்டு வந்துவிட்டேன். அப்புறம் தான் அம்மா திட்டவும் பிள்ளையாரை மட்டும் தரிசித்துவிட்டு வந்தேன். வரும்போது உனக்குத் தேங்காய் விள்ளல் எடுத்து வந்தேன்."

அதைச் சொன்னவுடனே சீனுவின் தொண்டை அடைத்தது. காக்காய் அதைக் கவனிக்காதது போல பேச்சை மாற்றியது: "சீனு, புறுவைப் பற்றி எல்லாம் தெரிந்து கொண்டு விட்டாயா ?"

"எல்லாம் எப்படித் தெரியும் ? 'பறந்து காட்டு' என்றேன். ஒரே அடியாக ஓடிவிட்டது எல்லாமும்!"

அப்பொழுது 'கூ, கூருக்' என்ற சுரம் கேட்டது. உடனே பல பறவைகள் அதையே மாறி மாறிப் பாட நேர்ந்ததும் ஒரே சுசுலரமான முணமுணப்புப் போல அழகாக இருந்தது காதுக்கு.

"பார்த்தாயா, அவை அன்புப் பேச்சுப் பேசுகின்றன ?" என்றது காகம்.

"இப்படியெல்லாம் பேசினால் என் அம்மா திட்டுவாள்!" என்றான் சீனு.

"உன் அம்மாவுக்குத்தான் நான் பேசுவது புரியாதே ?"

"ஆமாம். மாமா மாதிரி அம்மா கூட நம்ப மாட்டாள்!" என்று ஒப்புக்கொண்டான் சீனு.

"உன் மாமாவுக்கு எப்பக் கல்யாணம் ?"

"அடுத்த மாதம். அவர் முன்பு குயில், மயில், குருவி, கிளி, என்று வருணித்தாரே அவளைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப்போகிறாராம்!" என்றான் சீனு.

"உனக்குத்தான் இப்பொழுது குயில், மயில் எல்லாம் எப்படியிருக்கும் என்று தெரியுமே? போய்ப் பார், கல்யாணப் பெண் அப்படி இருக்கிறதா என்று."

"பார்க்கத்தான் போகிறேன்."

"சரி, நாழிகையாகிவிட்டது; நான் வருகிறேன்" என்றது காகம்.

"இப்பொழுதே ஊருக்குக் கிளம்பி விட்டாயா?"

"இல்லை, காலையில் உன்னை எழுப்பிச் சொல்லி விட்டுத்தான் போவேன்" என்று கூறிவிட்டு அது பறந்து மறைந்தது.

சீனு கனக்கும் இதயத்துடன் உள்ளே போனான். அவனது வாட்டமான முகத்தைக் கண்ட அவன் தாய், "ஏன் உன் முகம் இப்படி வாடியிருக்கிறது?" என்று கேட்டாள்.

"ஓர் உயிர் நண்பன் நம்மை விட்டு ஊருக்குப் போய்விடுகிறேன் என்றால், ஒருவனுக்கு வருத்தமாக இராதா, அம்மா?" என்று விடை கூறினான் சீனு.

"ஆமாம், சற்று முன் தெம்பாக இருந்தவனுக்குத் திடீர் என்று என்ன நினைவு வந்து விட்டது?" என்று கேட்டாள் அம்மா.

"இப்பொழுதுதானே, அம்மா அவன் சொல்லி விட்டுப் போயிருக்கிறான்."

"போடா, பைத்தியம். உளறுதே!"

"உளறவில்லை, அம்மா" என்று ஆரம்பித்துச் சலங்கைக் காக்காயைப் பார்த்ததிலிருந்து இன்று வரை கூறினான் சீனு. அவன் அம்மா அவனை ஒரு தினுசாகப் பார்த்துவிட்டுச் சிரித்தாள்.

"மாமா சொல்வது சரிதான். உன் கற்பனைக்கு அளவே இல்லையா? பயித்தியம் கியித்தியம் பிடித்து விடப் போகிறது!" என்றாள்.

சீனுவுக்கு அதைக் கேட்டதும் மிகவும் வேதனையாக இருந்தது. "இவர்களை எப்படியாவது நம்ப வைக்க வேண்டும்" என்று அவன் கங்கணம் கட்டிக் கொண்டான்.

உடனே தன்னிடம் இருந்த ஒரு காலி நாலு குயர் நோட்டுப் புத்தகத்தில் தனக்கு நேர்ந்தது யாவற்றையும் அப்படியே எழுத ஆரம்பித்தான். அதன் பிறகு பாடங்களை எழுதி வைத்துவிட்டு அவன் படுத்த உடனே உறங்கி விட்டான்.

காலையில் அவன் படுத்திருந்த இடத்தில் இறக்கைகளின் ஓசை கேட்கவும் அவன் விழித்துக் கொண்டான். சலங்கைதான் சொல்லிக்கொள்ள வந்ததோ என்று சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

"நான்தான் உன் வீடு தேடி வந்துவிட்டேன், பார்" என்று இன்மொழிகளில் பேசியது புரு.



சீனு அதை ஆசையுடன் தழுவிக் கொண்டான். உடனே இன்னொரு புரு வந்து அவன் மடியில் அமர்ந்தது.

"இது என் மனைவி. நாங்கள் எப்பொழுதும் பிரிந்திருப்பதில்லை. ஆயுள் வரை ஒன்ருகவே இருப்போம்" என்று மன்னிப்புக் கேட்கும் பாவனையில் பேசியது ஆண் புரு.

"ஏன் வெட்கப்படுகிறாய்? அப்படி இருப்பது தானே நல்லது? மனிதர்களில் அதுதான் விசேஷம் என்று கருதுகிறோம்" என்று சமாதான மூட்டினான் சீனு.

"நாங்கள் உன்னைப் போல்தான், சீனு. மாமிசமே சாப்பிடமாட்டோம். ஈ, எறும்பு, புழு, பூச்சி என்று அலையமாட்டோம். பயிர்ப் பொருள்தான் உண் போம்" என்றது புறா, பெருமையாக.

"உனக்கு என் வீட்டுத் தோட்டத்திலேயே கூடு கட்டித்தரச் சொல்லட்டுமா?" என்று கேட்டான் சீனு.

"கட்டித் தந்தால் இருப்போம். உயரமாக உன் வீடு போலவே கூரை போட்டுக் கட்டிக்கொடேன்" என்றது ஆண் புறா.

"நாங்கள்தான் வீடு கட்டிக் கொடுத்தால் இருக் கிறோம். முக்கால்வாசி புறாக்கள் காட்டிலேயே செடி களில் வசிப்பவை" என்றது பெண் புறா.

சீனு இரண்டையும் மாறி மாறிப் பார்த்தான். இரண்டும் ஒரே மாதிரி இருந்தன. எது எது என்றே சீனுவுக்குப் புரியவில்லை.

"ஓகோ, புது நண்பர்களும் வந்து விட்டார் களா?" என்று கேட்டுக்கொண்டே சலங்கைக் காக்காய் சன்னலில் வந்து உட்கார்ந்துகொண்டது.

"கிளம்பிவிட்டாயா, சலங்கை!" என்று பரிதாப மாகக் கேட்டான் சீனு.

"ஆமாம், சீனு, உன்னிடம் ஒன்று கேட்கப் போகிறேன், சொல்வாயா?" என்று கேட்டது சலங்கை.

"ஏன் அப்படிக் கேட்கிறாய்? உனக்கு நான் மாட்டேன் என்று சொல்வேனா?"

"அப்படியானால் முன்பு என் காலில் இருந்த சலங்கையைக் கட்டி விடு."

"ஏன்? உன் காலில் பளு கூடாது என்றுதானே எடுத்தேன்."

"கட்டிவிடு. அந்தப் பளு உன் அன்புப் பளு என்று தூக்கிப்போகிறேன்" என்றது காகம்.

சீனுவின் கண்களில் கூட நீர் நிறைந்துவிட்டது.

"சீனு!"

"போ, சலங்கை" என்றான் சிறு அறைக்கு. மறுக்கவும் மனமில்லை. கனமான பித்தளைச் சலங்கையைக் கட்டவும் பிடிக்கவில்லை. பிறகு அவன் உள்ளே சென்று அம்மாவின் கொண்டை ஊசியிலிருந்த வெள்ளிச் சலங்கையைக் கழற்றி வந்து காகத்தின் காலில் கட்டி விட்டான். அது உடனே விடை பெற்றுக் கொண்டு பறந்து ஆகாய வெளியில் மறைந்துவிட்டது. சீனு தோட்டத்தில் போய் அது போன திக்கைப் பார்த்துவிட்டுத் தன் கண்களில் துளித்த நீரைத் துடைத்துக்கொண்டான்.

"அழாதே, சீனு. நாங்கள் எல்லோரும் உன்னை விட்டுக்கொடுக்க மாட்டோம்—உன்னுடன் தினமும் பேசவும் விளையாடவும் வருவோம்" என்றது மயில்

அவன் எதிரே தோகை விரித்து நின்றது. அதன் மனைவி அருகில் நின்றது.

புறாத் தம்பதிகள், குருவிக் குடும்பம், குயில் தம்பதிகள், சோலைக்கிளியும், கூண்டுக் கிளியும் எல்லாம் கூடியிருந்தன. நண்பர்களில் ஒன்று சலங்கையை வழி அனுப்பிவிட்டும், மற்றொன்று சீனுவை ஆசுவாசப்படுத்தியும், அன்பை வெளிப்படுத்தின.

சீனு அவைகளுடன் சிறிது நேரம் இருந்துவிட்டு உள்ளே போனான். அவன் தாய் கண்ணாடி முன் என்னவோ தேடிக்கொண்டிருந்தாள்.

"சீனு, என் கொண்டை ஊசியிலே இருக்கிற சலங்கையைப் பார்த்தாயா?" என்று கேட்டாள்.

"நான் எடுத்துச் சலங்கைக் காக்காய்க்கு என் நினைவாகக் கட்டிவிட்டேன்" என்றான் சீனு.

"சரி, இப்படித்தான் பதில் சொல்லப்போகிறாயா? சரி, போனால் போகட்டும். உன் நண்பனே கட்டிக்கொள்ளட்டும். எனக்கு அகப்படும்போது அகப்படட்டும்" என்றாள் அன்னை, துளிகூட நம்பாத முறையில். பிறகு அவள் கல, கல வென்று சிரிப்பதும் கேட்டது.

சீனுவும் மனத்திற்குள் சிரித்துக்கொண்டான். அம்மாவிடமிருந்து சலங்கையை எடுத்துக்கொண்டதற்கு அவன் சிறிதும் வருத்தப்படவில்லை. அம்மாவின் அவநம்பிக்கைக்கு ஏற்ற தண்டனை என்று நினைத்துக்கொண்டான்.

ஒரு மாதம் கழித்து சீனு மாமாவின் கல்யாணத் திற்குப் போனான். விருந்துச் சாப்பாட்டை ரசித்துச் சாப்பிட்டான். பட்சண வகைகளைத் தின்று வயிற்று வலிகூடக் கண்டு விட்டது.

அன்று அவன் மாமாவும் மாமியும், அம்மா வையும் அப்பாவையும் வணங்கியபோது அவர்கள் வாழ்த்தினார்கள். "நீங்கள் இருவரும் ஒற்றுமையாக, நீண்ட வாழ்நாளோடு..." என்று அவர்கள் ஆரம்பித் ததுமே சீனு குறுக்கிட்டு, "மாடப்புறுக்கள்போல இருங்கள்" என்று முடித்தான்.

"அட போக்கிரி! உனக்கு மாடப்புறுவைப்பற்றி என்னடா தெரியும்?" என்றார் மாமா.

மாமி நாணத்துடன் தலை கவிழ்ந்தாள்.

சீனு ஓடிப்போய் தான் எழுதிவைத்திருந்த புத்த கத்தையும், வரைந்து வைத்திருந்த படங்களையும் மாமாவின் கையில் கொடுத்தான்.

மாமா புத்தகத்தைத் திறந்து பார்த்தார். புறு வைப்பற்றிப் படித்தார் சில வரிகள். அவர் முகம் ஆச்சரியத்தில் ஆழ்ந்துவிட்டது.

"உன் அப்பாவுக்குக் காட்டினாயாடா, சீனு?" என்று கேட்டார் மாமா.

"இல்லை" என்றான் சீனு பயத்துடன்.

"இதைப் படியுங்கள். நான் என்னவோ நினைத் தேன் நம் தொந்தி யானையை! ஒரு விஷயம் பழுது கிடையாது. பறவைகளை ஆராய்ந்து எழுதியிருக் கிறான்" என்று புகழ்ந்தார் மாமா.

சீனுவின் அப்பா புத்தகத்தை வாங்கிப் பிரித்துப் புரட்டிப் பார்த்தார். முத்து முத்தான கையெழுத்தில் தெளிவாக, அழகான பட விளக்கங்களுடன் எழுதியிருந்தான் அவன். சீனு அப்பாவின் முகத்தையே பார்த்தான். அவர் அவனை அருகில் அழைத்து ஒரு கையால் அணைத்தபடியே, "உனக்கும் உன் அக்காவுக்கும் அவனிடம் நம்பிக்கையில்லையே தவிர, எனக்குத் தெரியும்: அவன் இப்பொழுதெல்லாம் மிகவும் கெட்டிக்காரனாகிவிட்டான். அவனிடம் ஒரு வித சக்தி வந்துவிட்டது" என்றார் அப்பா.

இப்பொழுது சீனுவுக்குப் பயமே தோன்றவில்லை. அப்பாவை அப்படியே கட்டிக்கொண்டு விட்டான்.

